# தெய்வ மலர்

(சிறு கதைத் தொகுப்பு)

எஸ். நவராஜ் செல்லையா
M.A;D.P.E;M.P.Ed.



# Bilbliograpical Data

| | |
|---|---|
| Title | ... THEIVA MALAR |
| Author | ... S. Navaraj Chelliah |
| Language | ... Tamil |
| Edition | ... First |
| Date of Publication | ... October 1981 |
| Copy Right | ... S. Navaraj Chelliah |
| Paper Used | ... White Printing 10.9 Kg. |
| Size of the Book | ... 17.5 c.m. × 12 c m. |

**Price** ... Rs. 3-00

| | |
|---|---|
| Printing Type Used | ... 12 point |
| No. of Pages | ... 72 Pages |
| No. of Copies | ... 1200 |
| Printer | ... Grace Printers<br>59, Lake view Road,<br>West Mambalam<br>Madras-600 033 |
| Publisher | ... Santhi Malar Pathippagam<br>46, Ranganathan Street,<br>T. Nagar Madras-17 |
| Subject | ... Short Stories for Children |

# முன்னுரை

சிறுவர்களுக்குக் கதை எழுதுவதை, சிரமமான காரியம் என்பார்கள்.

சொல்ல வந்ததை சுருக்கமாக மட்டுமல்ல தெளிவாகக் கூற வேண்டும். அதையும் குழந்தைகள் மனம் ஏற்றுக் கொள்கின்ற வகையில் சொல்ல வேண்டும் என்றெல்லாம் பல நிபந்தனைகளும் கட்டுப்பாடுகளும் இதில் உண்டு.

எல்லாவற்றிற்கும் ஆட்பட்டு இந்த நூலில் உள்ள கதைகளை மிகவும் கவனத்துடன் எழுதியிருக்கிறேன்.

இது சிறுவர்களுக்காக எழுதப்பட்ட ஆறுவது கதைப் புத்தகமாகும்.

எல்லா நூல்களும் பள்ளிகளில் துணைப்பாடநூல்களாக வைக்கப்பட்டிருக்கின்றன. எனது நூல்களின் அருமையை உணர்ந்து ஆதரித்து வரும் தலைமை ஆசிரிய, ஆசிரியைகளுக்கும், பள்ளித் தாளாளர்களுக்கும் எனது மனப்பூர்வமான நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

குழந்தைகள் விரும்பும் கதாபாத்திரங்களை மனதில் கொண்டு, எழுதப்பட்ட இக் கதைப் புத்தகத்தை பெற்றோர்களும் குழந்தைகளும் பெரிதும் விரும்பி ஏற்பார்கள் என்ற நம்பிக்கையுடன் இந்த நூலை உங்கள் கையில் அளிக்கிறேன்.

ஞானமலர் இல்லம் | எஸ். நவராஜ் செல்லையா
சென்னை-17 | 11-9-81

# பொருளடக்கம்

# 1. நரியும் மீனும்

கோழிக்குஞ்சுகள் என்றால் அந்த நரிக்கு அதிக ஆசை. காட்டில் அது வசித்தாலும் அடிக்கடி ஊரை நோக்கி ஓடி வந்துவிடும். பதுங்கிப் பதுங்கிப் போகும். வீட்டுக்காரர்கள் வெளியே போகும்வரை கண்ணை விழித்துக் கொண்டே காத்திருக்கும். அவர்கள் வேலைக்குப் போய்விட்டால் இன்னும் கொண்டாட்டம்தான்.

கொஞ்சம்கூட சத்தம் செய்யாமல் ஒரே இடத்தில் நரி படுத்திருக்கும். குஞ்சுகளுடன் கோழிகள் குப்பை மேட்டில் மேயும்போது, நரியும் மெதுவாகக் கூடவே செல்லும். அது நடக்கும் போது சத்தமே கேட்காது. அப்படி மெல்ல மெல்ல அடி எடுத்து வைக்கும்.

கோழிகள் மேயும் வேகத்தில் தனியே போகும். குஞ்சுகள் பின்னால் நிற்கும். அப்பொழுது மெதுவாகப் பின்னே சென்று ஒரு கோழிக் குஞ்சைப் பிடித்துக் கொண்டு ஒரே ஓட்டமாக ஓடிவிடும். அது பொல்லாத நரி. தந்திரக்கார நரி.

கோழிக் குஞ்சைப் பிடித்தால் பயந்து கொண்டு சத்தம் போடுமே! அதற்காக, அந்த நரி கோழிக் குஞ்சின் கழுத்தைத்தான் முதலில் கௌவிப் பிடிக்கும். கழுத்தைப் பிடித்தால் அது எப்படி சத்தம் போடும்? இப்படியே நரி, கோழிக் குஞ்சுகளைக் கொன்று தின்று கொழுத்துக் கொண்டிருந்தது.

ஊரில் உள்ளவர்கள் எல்லாம், கோழிக் குஞ்சுகள் காணமல் போவதை அறிந்து, முதலில் தேடிப் பார்த்தார்கள். அப்பொழுதும் ஒன்றும் தெரியவில்லை. எப்படியாவது கண்டு பிடித்துவிட வேண்டுமென்று முயற்சி செய்தார்கள். அவர்களால் முடியவில்லை.

கூட்டம் போட்டார்கள். சிலர் சத்தம் போட்டார்கள். பிறகு யோசனை செய்தார்கள். அதன்படி அவர்கள் ஒரு முடிவுக்கு வந்தார்கள். எப்படி கோழிக் குஞ்சுகள் காணமல் போகிறது என்பதைக் கண்டுபிடிக்க, 'வீட்டுக்கு ஒரு ஆள், ஒரு ஒருநாள் காவல் காக்க வேண்டும்' என்று திட்டம் போட்டார்கள்.

திட்டப்படி ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு ஆள், காவல் காத்து வந்தும், திருட்டு நிற்கவில்லை. இரண்டு நாள் எதுவும் காணமல் போகாது. காவல்காரர் கொஞ்சம் அயர்ந்து இருந்தால், மூன்றும் நாள் கோழிக் குஞ்சுகள் காணமல் போய் விடும். நரி, மிகவும் தந்திரமாகத் திருடித் தின்று வந்தது.

காவல் போட்டு முப்பது நாள் முடிந்தது. எப்படி திருட்டு போகிறது? யார் வந்து திருடுகிறார்? என்பது யாருக்கும் புரியவில்லை. ஊரில் ஒரே குழப்ப மாக இருந்து. அவர்கள் அதிகக் கோபமாகவும் இருந்தார்கள். அவர்களில் ஒருவன் ராமன். நல்ல புத்திசாலி. இனி யாரும் காவல் காக்க வேண்டாம் என்று முடிவெடுத்த பிறகும் கூட, யாருக்கும் தெரியாமல் அவன் பார்த்துக் கொண்டே வந்தான். இது நரிக்குத் தெரியாது. யாருக்கும் தெரியாது.

'இனிமேல் காவல் இல்லை' என்று நினைத்துக் கொண்டு' முன்போல் தைரியமாக வந்து, தினந் தினம் திருடிக் கொண்டு சென்றது நரி. இதை ஒரு நாள் பார்த்து விட்டான் ராமன். ஆனால், இதை யாரிடமும் அவன் சொல்லவில்லை. நரி எப்படி வருகிறது? எங்கே நிற்கிறது? எவ்வாறு கோழிக் குஞ்சைப் பிடிக்கிறது? எந்த வழியாகத் தப்பி ஓடுகிறது என்பதையெல்லாம் நன்றாகப் பார்த்து வைத்துக் கொண்டு, ஊரில் உள்ள எல்லோரிடமும் கூறினான். அவர்கள் ராமனைப் பாராட்டினார்கள்.

அவர்கள் யோசனை செய்தார்கள், தந்திரமாக நரியைப் பிடித்துவிட வேண்டுமென்று திட்டம் போட்டு, நரி வரும் வழியே காத்திருந்தார்கள். ஊருக்குப் பக்கத்தில் வந்ததும் நரியைப் பிடிக்கலாம் என்பது அவர்கள் திட்டம். ஊர் அருகில் வந்தது நரி, மறைந்து நின்ற ஒருவர் தும்மல் போடவே நரி பயந்து கொண்டு ஓட்டம் பிடித்தது.

ஆங்காங்கே நின்றவர்களும் 'விடாதே நரியை பிடி! பிடி! என்று விரட்டிக் கொண்டு ஓடினார்கள். நரியும் தலைதெரிக்க ஓடியது. இனி தப்பிக்க முடியாது என்கிறபோது, குளத்தின் அந்த கரையில் உட்கார்ந்து ஒருவன் மீன்பிடித்துக் கொண்டிருப்பதை நரி பார்த்தது, அவனருகில் ஓடியது.

மீன் பிடிப்பவன் நரி இளைப்பு வாங்குவதைக் கண்டு பரிதாபப்பட்டான். 'ஐயா! எனக்கு ஒரு உதவி செய்ய வேண்டும் என்று நரி கேட்டது. உனக்கு உதவி செய்தால், நீ என்ன உதவி எனக்கு செய்வாய்' என்று திருப்பிக் கேட்டான் அவன்.

'ஒருநாள் முழுவதும் உட்கார்ந்து பத்து மீன் பிடிப்பீர்கள். நானோ உங்களுக்குத் தினமும் ஒரு கோழி கொண்டு வந்து தருவேன். அதை விற்று நீங்கள் சீக்கிரம் பணக்காரர் ஆகி விடலாம்!' என்றதும், மீன் பிடிப்பவனுக்கு மகிழ்ச்சி தாங்க முடியவில்லை. உனக்கு என்ன உதவிவேண்டும்' என்று கேட்டான் அவன்.

'என்னை எல்லோரும் விரட்டிக் கொண்டு வருகின்றார்கள். என்னை நீங்கள்தான் காப்பாற்ற வேண்டும்' என்றது நரி.

'அதோ அந்தப் பள்ளத்தில் படுத்துக்கொள். என் மீன்கூடையால் உன்னை மூடி விடுகிறேன். அவர்கள் வந்தால் வேறு பக்கம் சாடைக் காட்டி

போக சொல்கிறேன்' என்று நரியை மூடிவைத்தான். நரி போய் பத்திரமாகப் பதுங்கிக் கொண்டது. மீன் கூடை அதை மூடிக் கொண்டிருந்தது.

நரிக்கோ நல்லபசி! மீன் கூடை வேறு தலைக்கு மேல் இருந்தது. நரிக்கு ஆசை வந்து விட்டது. மீன்களைத் தின்று பசியாறிக் கொள்ளலாம் என்று ஒவ்வொரு மீனாகத் தின்ன ஆரம்பித்தது. ஒவ்வொன்றாகத் தின்று தீர்த்துக் கொண்டிருந்தது.



அந்த சமயத்தில் விரட்டிக் கொண்டு வந்தவர்கள் தேடிக் கொண்டே ஓடி வந்தார்கள். பக்கத்து ஊர்க்காரன் ஒருவன் உட்கார்ந்து மீன் பிடிப்பதைப் பார்த்தார்கள். இந்தப் பக்கம் ஒரு நரி வந்ததா? என்று ராமன் கேட்டான். எதுவுமே இங்கு வரவில்லைஎன்று மீன் பிடிப்பவன் பொய் சொன்னான்.

நரியும் சந்தோஷமாய் கேட்டுக் கொண்டே இன்னொரு மீனை சாப்பிடத் தொடங்கியது.

மீன் பிடிப்பவனும் தனக்கு தெரியவே தெரியாது என்று சாதித்தே விட்டான். சத்தியமும் செய்தான் அவர்களும் நம்பினார்கள், நரி எப்படி தப்பித்துப் போயிருக்கும் என்று புரியாமல் திகைக்கும் போது, ஒரு விக்கல் சத்தம் கேட்டது. எல்லோரும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டனர். மீன் பிடிப்பவனும் திரும்பிப் பார்த்தான்.

மூடியிருந்த மீன் கூடை மெதுவாக அசைந்தது. விக்கல் சத்தமும் தொடர்ந்து பெரிதாக வந்து கொண்டே இருந்தது. ராமன் ஓடிப் போய் கூடையைப் புரட்டிப் பார்த்தான். நரி திருதிருவென்று விழித்தது. மீனின்முள் வாயில் சிக்கிக் கொண்டதால், நரி வாயிலிருந்து இரத்தம் வந்து கொண்டிருந்தது.

ஒருவன் வலையை வீசி நரியைப் பிடித்துக் கொண்டான். கோழிக் குஞ்சுகளைத் திருடிய திருடன் நீதானே என்று ஆளுக்கொரு அடி போட்டார்கள். நரி வாயில் நல்ல அடி. இரத்தம் கொட்டியது. அடியை வாங்கிக் கொண்டே நரி அழுதது.

மீன் பிடிப்பவனைப் பார்த்து, 'என்னை ஒளித்துக் கொள்ளச் செய்துவிட்டு, காட்டியும் கொடுத்து விட்டாயே! நீ துரோகி' என்று கோபமாகப் பேசியது நரி.

பாவம் என்று மறைத்து வைத்தால், நான் பிடித்த எல்லா மீன்களையும் திருட்டுத்தனமாகத் தின்றுவிட்டாயே' உனக்கு உதை நன்றாக வேண்டும் என்று மீன் பிடிப்பவனும் ஓங்கி ஒரு அடி கொடுத்தான்.

'நீதான் நரியை மறைத்து வைத்தாயா! திருடனுக்கு உதவி செய்தால் என்ன தண்டனை தெரியுமா? என்று எல்லோரும் அவனை அடிக்க ஆரம்பித்தார்கள். ஐயா! நான் இனிமேல் இவ்வாறு தவறு செய்ய மாட்டேன். திருடனுக்கு உதவிசெய்ய மாட்டேன் என்று அழுதுகொண்டே சொன்னான். அவனுக்கும் நல்ல அடி.

'திருடுவது குற்றம். திருட்டுக்கு உதவி செய்வது மாபெரும் குற்றம்' என்று ராமன் கூறினான். 'ஆமாம்' என்றான் மீன் பிடிப்பவனும்.

நரியின் கால்களைக் கட்டி, நீண்ட குச்சியால் சேர்த்துத் தூக்கிக் கொண்டு போனார்கள். மீனுக்கு ஆசைப்பட்டு, மாட்டிக் கொண்டோமே என்று நரி அழுது கொண்டே இருந்தது.

'தவறு செய்தால் நிச்சயம் தண்டனை உண்டு' என்று ராமன் கூறியதைக் கேட்டு, மாட்டிக் கொண்ட நரி தலையை ஆட்டிக் கொண்டது.

## 2. புத்தி கெட்டப் பூனை

பூனைக்கு ஒரே சந்தோஷம். குரங்கு தனக்கு நண்பனாகக் கிடைத்ததால் தான். தனக்குத் தெரிந்த எல்லோரிடமும் போய் பெருமையடித்துக் கொண்டது.

குரங்கு மரத்தில் குதிப்பது, குட்டிக் கரணம் போடுவது, இரண்டு கால்களால் நிற்பது, நடப்பது, இவற்றையெல்லாம் அழகாகக் கூறி ஆனந்தம் அடைந்தது பூனை.

'ஒரு நாள் என் வீட்டிற்கு நீங்கள் வரவேண்டும்'' என்று பூனை ஆசையாகக் குரங்கைக் கூப்பிட்டது.

'உன் வீட்டிற்கு வந்தால். உன் எஜமானி என்னை அடித்து விரட்டுவாள்' என்று குரங்கு பயத்துடன் கூறியது.

'என் எஜமானி ரொம்ப நல்லவள். அவள் மடியில் தான் நான் எப்பொழுதும் படுத்திருப்பேன். என்னைப் பார்க்காவிட்டால் என் எஜமானிக்குத் தூக்கமே வராது' என்றது பூனை.

'நீ அதிர்ஷ்டசாலிதான். என்னைக் கண்டால் எல்லோரும் கல்லை எடுத்து அடிக்கிறார்கள். 'சீ' என்று விரட்டுகின்றார்கள். பல்லைக் காட்டி பழித்துக் காட்டுகின்றார்கள். எனக்கு அவமானமாக இருக்கிறது' என்று குரங்கு வருத்தப்பட்டுக் கொண்டது.

'மரத்தில் வசிப்பதால் தானே உன்னைக் கேவலமாகப் பேசுகின்றார்கள். என்னோடு என் வீட்டிற்கே வந்துவிடு' என்று கையைப் பிடித்துக் கூப்பிட்டது பூனை.

'நான் நாளைக்கு வருகிறேன்' என்று குரங்கு கூறி விட்டு, 'கிடுகிடு'வென்று மரத்தில் ஏறிக் கொண்டு கை அசைத்தது. பூனையும் சந்தோஷமாக வாலை ஆட்டி விட்டு, வீட்டை நோக்கி நடந்தது.

வீட்டிற்கு வந்ததும் முதல் வேலையாக தன் எஜமானியிடம் போனது பூனை. 'மியாவ்' என்று செல்லமாகக் கொஞ்சிக் கொண்டு எஜமானியின் காலடியில் உட்கார்ந்தது. எஜமானியும் பூனையின் முதுகில் அன்பாகத் தடவிக் கொடுத்தாள்.

பூனையும் இதுதான் சமயமென்று தன் நண்பனை குரங்கைப் பற்றி பேச்சை எடுத்தது. குரங்கைப் பற்றி புகழ்ந்து பேசியது.

'குரங்கு என்றால் குறும்புத்தனம் அதிகமாக இருக்குமே! திருடும். சண்டை போடும். பொய் பேசும். ஏமாற்றும். அதனுடன் உனக்கு நட்பு

வேண்டாம் போ' என்று எஜமானி பூனையை விரட்டினாள்.

''அந்தக் குரங்கு ஒன்றும் அப்படிப்பட்டதல்ல. பொய்யே அதற்குப் பேசத் தெரியாது. சண்டையும் போட வராது. அதைப் பற்றி எனக்கு நன்றாகத் தெரியும்'' என்று பூனையும் சமர்த்தாகப் பேசியது. எஜமானியும் யோசித்தாள்.

பிறகு, பூனையிடம் சரி என்று தன் சம்மதத்தை தெரிவித்து விட்டாள். பூனைக்கு சந்தோஷம் தாங்க முடியவில்லை. உடனே நண்பனைக் கூப்பிட பூனை ஓட்டமாக ஓடி விட்டது.

குரங்குக்கு அந்த வீட்டில் நல்ல வரவேற்பு இருந்தது. அந்த வீட்டில் எட்டுக் குடும்பங்கள் இருந்தன. எல்லோரும் ஆசையுடன் குரங்கைப் பார்த்தார்கள். ஆவலுடன் பேசினார்கள். குரங்கும் அவர்களுக்கு சலாம் போட்டு வணக்கம் செய்தது.

பூனையும் குரங்கும் இணைபிரியாத நண்பர்களாக அந்த வீட்டில் சுற்றிச் சுற்றி வந்தன. எல்லாருடைய வீட்டுக்கும் போய் போய் வந்தன. குழந்தைகளுடன் விளையாடின. பெரியவர்களுடன் சேர்ந்து உட்கார்ந்து கொண்டன. பலகாரங்கள் வாங்கித் தின்றன.

குரங்குக்கு மனதிலே ஒரு வருத்தம் இருந்தது. மற்றவர்கள் தருகின்ற ருசியான பண்டங்கள்

இன்னும் அதிகமாகக் கிடைக்கவில்லையே என்பது தான் அந்த வருத்தம். போதும் என்ற மனம் குரங்குக்கு இல்லை. அதிக ஆசை வந்து விட்டது. அதிக ஆசை அதிக நஷ்டம் என்பார்கள். அது மட்டுமல்ல. அதிகக் கஷ்டமும் தான்.

ஒரு வீட்டில் ஒரு குழந்தைக்குப் பிறந்த நாள் விழா. அந்த வீட்டில் அதிகமாக லட்டு செய்தார்கள். ஆளுக்கு ஒன்றாகக் கொடுத்தார்கள். குரங்குக்கும் ஒன்று தான். லட்டு தின்ற குரங்குக்கு, இன்னும் சாப்பிட வேண்டும் போல் இருந்தது. ஆனால் யார் கொடுப்பார்! வீட்டுக்காரரிடம் கேட்க வெட்கம். பூனையிடம் கேட்கப் பயம். குரங்குக்கு ஒரே கவலை.

வீட்டுக்காரர்கள் எல்லோரும் வெளியே நின்று பேசிக் கொண்டிருந்தபோது, குரங்கு நைசாக உள்ளே புகுந்தது. இரண்டு லட்டை எடுத்துக் கொண்டு, பின்புற வழியாகப் போய் ஒரு மரத்தில் ஏறி மறைந்து கொண்டு, ஆசை தீரத் தின்றது.

இப்படியாக குரங்கு ஒவ்வொரு வீட்டிலும் புகுந்து, ஆசையான தின்பண்டங்களைத் திருடிக் கொண்டு, மரத்தில் ஏறித் தின்பது வழக்கமாகப் போய் விட்டது.

ஒவ்வொரு வீட்டிலும் தின்பண்டங்கள் திருட்டுப் போவது அதிகமாகப் போயிற்று. முதலில் குழந்தைகள் மீது சந்தேகப் பட்டார்கள். அவர்கள் இல்லையென்றதும், பூனை மேல் சந்தேகப்பட

ஆரம்பித்தார்கள். பூனேயோ, 'நான் எடுப்பதே இல்லே' என்று சத்தியம் செய்தது. குரங்கோ 'எனக்குத் திருட்டுப் பழக்கமே கிடையாது' என்று தன் தலேயிலடித்து சத்தியம் செய்தது.

தனியே விசாரித்த போது, பூனேதான் திருடியது என்று குரங்கு கூறியது. பூனேயோ எங்களுக்குத் தெரியவே தெரியாது என்று கூறியது. ஆனல், வீட்டுக்காரர்களுக்கு இந்த இருவர் மேலும் சந்தேகம் இருந்ததால், வருகிற ஞாயிற்றுக்கிழமை 'உங்களே விசாரிக்கப் போகிறேம்' என்று கூறி விட்டார்கள்.

காலே 6 மணிக்கு விசாரணே. பூனே குரங்கை சமாதானம் செய்தது. தான் எப்படியும் மாட்டிக் கொள்ளப் போகிறேம் என்று குரங்கு தனக்குள்ளே பேசிக் கொண்டு திட்டம் போட்டது. ஞாயிற்றுக் கிழமை காலேயில் விசாரணேயல்லவா!

ஞாயிற்றுக்கிழமை விடியற்காலே நான்கு மணிக்கு பூனேயை குரங்கு எழுப்பியது. விசாரணேக்கு முன் நாம் கோயிலுக்குப் போய் சாமி கும்பிட்டு விட்டு வருவோம் என்று பூனேயைக் குரங்கு அழைத்தது. அது மார்கழி மாதம். பனியும் குளிர் காற்றும் அதிகம் அல்லவா!

ஒரு மைல் தூரம் நடந்து பூனேயும் குரங்கும் கோயிலுக்குப் போய் விட்டு வந்தன. பூனேக்கோ அதிகக் குளிர். நடுங்கிக் கொண்டு நின்றது. குரங்குக்கு அந்தக் குளிர் ஒன்றும் செய்யவில்லே.

அதற்குத்தான் பழக்கம் ஆயிற்றே! இரண்டும் சரியாக விசாரணைக்கு வந்து நின்றன.

'நீ தானே திருடினாய்' என்று குரங்கைக் கேட்டார்கள். 'நான் இல்லவே இல்லை' என்று குரங்கு பொய் சொல்லி விட்டு தைரியமாக நின்றது.

'நீ தானே திருடினாய்' என்று பூனையைக் கேட்டார்கள். ஏற்கனவே குளிரில் நடுங்கிக் கொண்டிருந்த பூனை, பயத்தில் மேலும் நடுங்கிக் கொண்டு, 'நான் திருடவே இல்லை' என்று சொன்னது. பூனை நடுங்கியதைப் பார்த்து விட்டு, பூனைதான் திருடியது என்று முடிவு செய்து, நான்கு அடி கொடுத்து, வீட்டை விட்டே விரட்டி விட்டார்கள், குரங்கை நல்ல குரங்கு என்று பாராட்டி வீட்டிலே வைத்துக் கொண்டார்கள்.

குரங்கை வாழ்த்தி விட்டு, பூனை போய் விட்டது. குரங்கோ தன் திட்டம் பலித்ததென்று கும்மாளம் போட்டது. இனி எல்லா தின்பண்டமுமே தனக்குத் தான் கிடைக்கும் என்று நினைத்து சந்தோஷம் அடைந்தது.

முதன்முதலில் திருடிய அந்த வீட்டைக் குரங்கு எட்டிப் பார்த்தது. அந்த வீட்டில் யாரும் இல்லை. மெதுவாகக் கதவைத் தள்ளிவிட்டு, குரங்கு உள்ளே போனது. எள்ளுருண்டை வாசம் ஜம்மென்று வந்தது. அதிக உயரத்தில் இருந்ததால் அந்த

ஜாடி எட்டவில்லை. கீழே உட்கார்ந்தபடி பார்த்துக் கொண்டே குரங்கு யோசனை செய்தது.

அந்த நேரத்தில் ஒரு எலியானது அந்த ஜாடி பக்கம் ஓடிவரவே, கண்ணாடி ஜாடியின்மீது மோதி கீழே தள்ளிவிட்டது. அந்த ஜாடி குரங்கின் தலைமீது



டமாரென்று விழுந்தது, தலையில் ரத்தக் காயத்தையும் உண்டாக்கிவிட்டது. ரத்தம் கொட்டோ கொட்டு என்று கொட்டியது.

சத்தம் கேட்ட வீட்டுக்கார அம்மாள் உள்ளே இருந்து ஓடிவந்தாள். குரங்கு ரத்தம் சொட்டச் சொட்ட தரையில் கிடந்தது. இத்தனை நாளும் நீதான்

திருடி இருக்கிறாய், திருட்டுக் குரங்கே! என்று ஒரு அடி கொடுத்தார். அந்த வீட்டுக் குழந்தைகளும் வந்து குச்சை எடுத்துக் கொண்டு அடிக்கவே, தப்பித்தேன் பிழைத்தேன் என்று குரங்கு ஓட்டம் பிடித்தது.

திருடியபோது தண்டனை கிடைக்கவில்லை. திருடாத போது தண்டனை கிடைத்தது எப்படி? என்று குரங்குக்கும் புரியவே இல்லை. யோசித்துக் கொண்டே இருந்தது,

திருட்டுக்குத் தண்டனை எப்பொழுதும் உண்டு என்பதுதானே கடவுளின் கட்டளை!

பொல்லாத நண்பரிடம் பழகி, வீட்டை விட்டுப் போன பூனையை நல்ல பூனை என்றார்கள். போனது திரும்பி வருமா என்ன?

## 3. மொட்டை வால் எலி!

எலிகளுக்கெல்லாம் அந்த நெட்டைவால் எலி தான் ராஜா. அந்த ராஜா எலிக்கு தன் அழகிலே அதிக கர்வம். தன் அழகைப் பற்றியே பெருமை யாகப் பேசிக் கொள்ளும். அதற்கு நீண்ட வால் உண்டு.

யாரையாவது கூப்பிட்டு அதிகாரம் பண்ணும் போது, தன் வாலை ஆட்டியே போகச் சொல்லும். மீறி யாராவது பேசினால், தன் வாலாலேயே மற்ற எலிகள் முகத்தில் அடிக்கும். அதனால் மற்ற எலிகள் பயந்து கொண்டு, சொன்னபடி கேட்டுக் கொண்டு இருந்தன.

எலிகள் எல்லாம் விருப்பம்போல் விளையாடிக் கொண்டு இருந்தபோது, எலிராஜா வந்து 'நீங்கள் இஷ்டம் போல் கண்ட இடத்திற்கெல்லாம் போகக் கூடாது. பூனை வந்து பிடித்துக் கொள்ளும். மிகவும் எச்சரிக்கையாக இருக்க வேண்டும்' என்று கூறியது.

'பூனையைக் கண்டால் எங்களுக்குப் பயம்தான். எப்படித் தப்பி ஓடுவது என்றே எங்களுக்குத்

'தெரியவில்லை' என்று எல்லா எலிகளும் ராஜாவிடம் அழாத குறையாகக் கூறின.

'உங்களுக்கு மூளையே கிடையாது என்று எனக்கு நன்ருகத் தெரியும். நல்ல நல்ல யோசனைகளை உங்களுக்கு சொல்லித் தருகிறேன். என்கூட எல்லோரும் வாருங்கள்' என்று ராஜா எலி அழைத்தது.

ராஜா எலி எல்லோரையும் வேலை வாங்கி ஏமாற்றி சாப்பிட்டு வந்ததால், நிறைய கொழுப்பேறி இருந்தது. தன் உடலைத் தூக்கி நடக்க முடியாமல் நெளித்து நெளித்து நடந்தது. அது போகின்ற அழகைப் பார்த்து, வாய்க்குள்ளே சிரித்துக் கொண்டே மற்ற எலிகள், பின்தொடர்ந்து போயின.

கொஞ்ச தூரத்தில், அங்கே ஒரு பெரிய ஆலமரம் இருந்தது. 'அதுதான் நமது பயிற்சி மைதானம்' என்று கூறியபடி நெட்டைவால் எலி எல்லோரையும் சுற்றும்முற்றும் பார்த்தது.

'எல்லோரும் வரிசையாக நில்லுங்கள்' என்று சத்தம் போட்டது. பயந்து கொண்டே மற்ற எலிகள் வந்து வரிசையாக நின்றன.

'உங்களுக்கெல்லாம் அறிவே கிடையாது. நான்தான் தப்பித்துக் கொள்ளும் தந்திரங்களை யெல்லாம் அறிந்தவன். சாமர்த்தியம் இருப்பதால் தான், நான் உங்களுக்கு எல்லாம் ராஜாவாக

இருக்கிறேன். உண்மைதானே' என்று நெட்டைவால் எலி கத்தியது.

'ஆமாம் ஆமாம்' என்று வாயைப் பொத்திக் கொண்டு எல்லாம் தலையை ஆட்டின.

இங்கே பார்த்தீர்களா! எத்தனை பொந்துகள் இருக்கின்றன! அங்கே பாருங்கள் ஒரு குட்டிச் சுவர் இருக்கிறது. பூனை வந்தால் சுவற்றில் ஏறித் தாண்டி ஓடிவிட வேண்டும். இல்லையேல் புதரில் போய் பதுங்கிக் கொள்ள வேண்டும்.

,அதுவும் முடியாவிட்டால்' என்று ஓர் குட்டி எலி கேட்டது. சிறிய பொந்தாக இருந்தாலும் உள்ளே போய் பதுங்கிக் கொள்ள வேண்டும். உங்கள் மூளையை உபயோகப்படுத்த வேண்டும். சீக்கிரமாக ஓடவேண்டும். என்னால்தான் இப்படியெல்லாம் செய்ய முடியும். உங்களுக்கு ஒன்றுமே தெரியாது. இல்லையா? என்று ராஜா எலி கேட்டுக் கொண்டே கம்பீரமாக சிரித்தது.

தலையை நிமிர்த்திக் கொண்டு வானத்தைப் பார்த்து தற்பெருமையோடு ராஜா எலி சிரித்துக் கொண்டே இருந்தது.

'மியாவ்' என்று ஒரு சத்தம். பூனைதான் கத்துகிறது என்று ஒரு குட்டி எலி சத்தம் போட்டது. பூனையா? என்று ராஜா எலி பயந்து கொண்டே கேட்டது. ஆமாம்! பூனைதான்! என்று எல்லா

எலிகளும் ஓடிப் போய்விட்டன. குட்டிச் சுவரை தாண்டிக் கொண்டு ஓடின. பொந்துகளுக்குள் போய் புகுந்து கொண்டன.

ராஜா எலியும் ஓடப் பார்த்தது. பெரிய கொழுத்த உடம்பைத் தூக்கிக் கொண்டு அதனல்



ஓட முடியவில்லை. பக்கத்தில் உள்ள பொந்தில் நுழையப் பார்த்தது. உடம்பு உள்ளே நுழைய வில்லை. அங்குமிங்கும் ஓடிப் பார்த்தது. ராஜா எலிக்கு ஒன்றும் முடியவில்லை. 'இன்றோடு தொலைந் தோம்' என்று நினைத்துக் கொண்டே ஆலமரத்தின் கீழ் இருந்த ஒரு பொந்துக்குள் நுழைந்தது.

உடம்பு முழுவதும் போகத் தான் இடம் இருந்தது. ஆனல், அதன் நீண்ட வால் மட்டும் தெரியும்படி வெளியே கிடந்தது. பாய்ந்து வந்த பூனையும் எலியைத் தேடி அலைந்து வருகிறபோது, ராஜா எலியின் வால் மட்டும் வெளியே தெரிந்தது.

உடனே பூனை வாலைக் கௌவிக் கொண்டது. வெளியே இழுத்துப் பார்த்தது. வெளியே வராததால் 'தம்' பிடித்துப் பார்த்தது. இந்தப் போராட்டத்தில் எலியின் வால் பூனையின் வாயோடு வந்துவிட்டது.

அதை துப்பிவிட்டு, பூனை பொந்திற்குள் முகம் விடும்போது, நாய் ஒன்று குலைத்துக் கொண்டே அங்கு வந்தது. பூனை பயந்து கொண்டு ஓடிவிட்டது. வாலறுந்த எலி மனம் 'படக் படக்' என்று துடிக்கத் துடிக்கப் பயந்து கொண்டே பொந்தில் இருந்தது.

பூனை போனதும் எலிகள் வந்து பொந்தைச் சுற்றி நின்றுகொண்டன. வாலறுந்த எலிராஜா, மெதுவாக வெளியே வந்தது. உடல் முழுதும் காயங்கள். முனகிக் கொண்டே வந்தது. உடம்பெல்லாம் வலி. வாயிலிருந்து இரத்தம் கொட்டிக் கொண்டிருந்தது.

'தற்பெருமையாக உங்களிடம் பேசினேன். தந்திரம் தெரிந்ததே ஒழிய, செய்ய முடியவில்லையே! என் தலைக்கனத்திற்கு சரியான தண்டனை' என்று ராஜா எலி சொல்லிக் கொண்டே போனது.

மொட்டை வால் எலி நெளிந்து நெளிந்து போனதைப் பார்த்து, எலிகள் எல்லாம் வேறுபுறம் திரும்பி மெதுவாகச் சிரித்தன. சிரித்துக் கொண்டே இருந்தன.

சொல்வதைப் போலவே நன்றாக செய்பவர்கள் தான் புகழ் பெறுவார்கள். இல்லையேல் அடுத்தவர் கேலிக்கு ஆளாக நேரிடும்.

# 4. வண்டி மாடு

என் பெயர் நந்தி. ஆனால், எல்லோரும் என்னை வண்டிமாடு என்றுதான் கூப்பிடுவார்கள். அப்படிக் கூப்பிட்டால்தான் நானும் போவேன். இல்லையென்றால் பேசாமல் என் இடத்திலே படுத்துக் கிடப்பேன்.

வண்டிமாடு என்றால் என்ன பெருமை என்று நீங்கள் கேட்பீர்கள்! என் எஜமான் ஏகாம்பரம் ஒரு வியாபாரி. வாரம் ஒருநாள் வியாபாரத் திற்காக சந்தைக்குப் போவார். அவருடைய வில் வண்டியில் என்னை பூட்டுவார். நானும் ஜல் ஜல் என்று ஓடுவேன். ஊரே என்னையும் வண்டியையும் வேடிக்கை பார்க்கும்.

வண்டி இழுப்பது மட்டுமல்ல; வயல் உழும் வேலையை செய்வேன். கிணற்றில் இருந்து தண்ணீர் இழுக்கும் கவலை ஏற்றத்தையும் நான் இழுப்பேன். வீட்டு வேலைகள் என்ன இருந்தாலும், நான்தான் செய்வேன்.

வீட்டில் உள்ளவர்கள் என்னை நன்றாகக் கவனித்துக் கொண்டார்கள். புண்ணாக்கு, பருத்திக்

கொட்டை, பசும்புல்தான் எனக்குத் தீவனம். நான் படுத்துக்கொள்ள தனியாகக் கொட்டகை, எல்லா வசதிகளுடன் நானும் வாழ்ந்து வந்தேன். பத்து வருடங்கள் ஆகிவிட்டன நான் வந்து.

ஒருநாள் காலையில் நான் ஏதோ சத்தம் கேட்டு எட்டிப் பார்த்தேன். கழுத்தில் சலங்கை கட்டிக் கொண்டு ஒரு காளைமாடு வந்து வீட்டு வாசலில் நிற்கிறது. என் எஜமானன் முகத்தில் புன்சிரிப்பு. வீட்டிலுள்ள குழந்தைகள் எல்லோரும் கைகொட்டி வரவேற்கிறார்கள்.

என் முதலாளி சொல்கிறார். ''நந்திக்கு வயதாகி விட்டது. உடம்பில் சக்தியில்லை. அவனை விற்று விடவேண்டும். இனிமேல் இந்தக் காளையைத்தான் வைத்துக்கொள்ளப் போகிறேன்.''

எனக்கு ஒரே வருத்தமாகப் போய்விட்டது. இத்தனை காலமாக அவர்கள் கூடவே இருந்து வாழ்ந்தேன். இப்பொழுது எப்படிப் பிரிந்து போவது? எனக்கு முதலாளிமீது கோபங் கோபமாக வந்தது. ஆனாலும் நான் பொறுத்துக் கொண்டேன்.

எனக்கு ஆத்திரம் ஆத்திரமாக வந்துவிட்டதால், நன்றாக யோசித்துப் பார்க்க முடியவில்லை. ''எனக்கு சக்தி இருக்கிறது. வயதாகவில்லை' என்று நிரூபித்து காட்டி விடவேண்டும்''. இது தான் எனக்குத் தெரிந்த வழி.

யோசித்து யோசித்துப் பார்த்தேன். என் மூளைக்கு எதுவும் எட்டவில்லை. புதிதாக வந்த காளைமாட்டுக்கு கொட்டகை ஒன்று கட்டப் போவதாக கேள்விப்பட்டதும், எனக்கு இன்னும் ஆத்திரம்தான் வந்தது. என்ன செய்வது? எப்படி காண்பிப்பது?

கொஞ்ச தூரம் நடந்தால் யோசனை வரும் என்று மெதுவாக நடந்தேன். எதையோ வரிசையாக அடுக்கி வைத்திருந்தார்கள். அதன் பக்கத்தில் போய் பார்க்கலாம் என்று போனேன். மெதுவாக அதன்மேல் சாய்ந்தேன். என்ன ஆச்சரியம்! நான் சாய்ந்ததும் திபுதிபுவென்று எல்லாம் கீழே விழுந்தன. நான் பயந்து கொண்டு ஓடியே போய்விட்டேன்.

பிறகு யோசித்துப் பார்த்தேன். எனக்கு எவ்வளவு சக்தி இருந்தால், திபுதிபுவென்று அவை சாய்ந்து விழும்? முதலாளிக்கு இதை கூறவேண்டும் என்று ஆசைப்பட்டேன். ஆனால், அவர் ஊரில் இல்லை என்றார்கள்.

அடுத்த நாள் கட்டிடம் கட்ட செங்கற்களைக் கொண்டு வந்து அடுக்கி வைத்திருந்தார்கள். எனக்கு என்சக்தியை காட்ட வேண்டும் என்று ஆசை வந்தது. போய் மெதுவாக இடித்தேன். என்ன ஆச்சரியம்! செங்கல் 'பொத பொதவென்று' சரிந்து விழுந்தது. என் உடலில் இருக்கும் பலத்தைக் கண்டு நானே ஆச்சரியப்பட்டேன்- அன்றும் என் எஜமான்ஊரில் இல்லாததால், சொல்ல முடியவில்லை.

'நான்தான் பலசாலி' என்பதை எப்படியாவது முதலாளிக்குக் காட்டிவிட்டால், புதிய மாட்டை விற்றுவிடுவார். என்னையே வேலைக்கு வைத்துக் கொள்வார் என்று நம்பினேன். புதிய மாட்டின் மேலே எனக்கு கோபம் கோபமாக வந்தது. 'அதற்கு ஒரு புது கொட்டகை வேண்டுமா?கூடாது,' என்று நானே முடிவு செய்தேன்.

கொட்டகைக்கு செங்கல்லால் பாதிசுவர் கட்டி இருந்தார்கள். அதை முட்டித் தள்ளிவிட்டால், அப்புறம் எப்படி கொட்டகை போட முடியும்? அதனால் என் பலத்தை நம்பினேன். எனக்குதான் ஆத்திரமும் கோபமும் நிறைய இருக்கிறதே!

ஒரே முட்டுதான்! சுவர் இடிந்து விழும். நான்கு சுவருக்குக் நான்கு இடி. அப்புறம் தரை மட்டம்தான் என்று முடிவு கட்டினேன்.

முதன் முதலில் வேகமாக ஓடி ஒருபக்கத்து சுவரை இடித்தேன். ஈர சுவராக இருந்ததோ என்னவோ தெரியவில்லை. பொத்தென்று கீழே விழுந்தது. எனக்கு சந்தோஷம் தாங்க முடிய வில்லை, ஆனாலும் தலை 'கிண்'ணென்று இருந்தது. தலையில் வலி இருந்தாலும், இடித்துத் தள்ள வேண்டும் என்ற கோபம்.

அடுத்தபக்கத்து சுவரை ஓடிப்போய் இடித்தேன். சுவர் ஆடியது. ஆனால் விழவில்லை. தலையில் ஈரம் கசிவது போல இருந்தது. என் கோபத்தில் அதை

நான் கவனிக்கவே இல்லை. பின்னால் திரும்பிப் போய் மீண்டும் ஓடிவந்து சுவர்மீது முட்டினேன். என்ன ஆச்சரியம்!

மறுபக்கம் விழவேண்டிய செங்கல்சுவர் என் தலைமீது விழுந்தது. கொம்பு இரண்டும் முறிந்து



போனது. 'அம்மா' என்று அலறிக் கொண்டு கீழே விழுந்தேன். என் கால்களின்மேல் செங்கல் ஒன்று நன்றாக விழுந்து நசுக்கியது. அப்புறம் எனக்கு மயக்கம் வரவே, அப்படியே படுத்துவிட்டேன்.

விழித்துப் பார்த்தால், மாட்டு ஆஸ்பத்திரியில் என்னைபோட்டிருந்தார்கள். 'பைத்தியக்கார மாட்டை பார்த்தீர்களா டாக்டர்! செங்கல் சுவரில் மோதி தலையை உடைத்துக் கொண்டிருக்கிறது. வயதாகி விட்டதால், பத்திரமாகப் பாதுகாக்கலாம் என்றிருந் தேன். எவ்வளவு செலவானாலும், பரவாயில்லை.

தயவுசெய்து குணமாக்கி விடுங்கள்' என்று என் முதலாளி டாக்டரிடம் பேசிக் கொண்டிருந்தார்.

நல்ல எஜமானனைத் தவறாக நினைத்து விட்டோமே என்று வேதனைப்பட்டேன். டாக்டர் என்னைப் பிழைக்க வைத்தார். கால்தான் நொண்டியாகிவிட்டது.

வண்டியில் 'ஜல் ஜல்' என்று ஓடிய நான், இப்பொழுது நொண்டி நொண்டி நடக்கிறேன்.

என்னுடைய அவசரபுத்திதான் என்னுடைய கால் ஒடிந்தற்கும் கொம்பு முறிந்ததற்கும் காரணம். கோபப்படாமல் இருந்திருந்தால், நான் நன்றாக இருந்திருப்பேன்! அல்லவா!

நீங்களும் என்னைப்போல முன் கோபியாக இருக்காதீர்கள். எதையும் யோசித்துச் செய்யுங்கள். நன்றாக வாழ்வீர்கள்.

நான் காலுக்கு மருந்துபோட ஆஸ்பத்திரிக்குப் தான் போய்க் கொண்டிருக்கிறேன். வரட்டுமா!

# 5. நல்ல பாடம்!

''பள்ளிக்கூடத்துக்கு நேரமாகிவிட்டதே! நேரம் கழித்துப் போனால், ஆசிரியர் கோபித்துக் கொள்வாரே' என்று அவசர அவசரமாகப் புறப் பட்டான் அன்பழகன்.

எப்பொழுதும் மணிஅடிப்பதற்கு முன்பாகவே வகுப்பிற்கு வந்து விடுவான். இன்று அவன் வழக்கம்போல் புறப்படாமல், விளையாடிக் கொண்டு இருந்துவிட்டான்.

அவன் அதிக ஆசையோடும் அன்போடும் விளையாடுவது அவனுடைய செல்ல நாய்க்குட்டி யோடுதான். அதன் பெயர் டாட்டா. அவன்தான் அதற்கு அப்படிப் பெயர் வைத்தான். ஏனென்றால், அவன் வீட்டைவிட்டு வெளியே போகும்போது முன் காலைத் தூக்கிக் கொண்டு, இரண்டு கால்களால் வணக்கம் சொல்வது போல் நிற்கும். அதனால், அதனை டாட்டா என்று கூப்பிடுவான்.

அவன் வீட்டில் அனைவரும் அப்படியே நாய்க் குட்டியை அழைப்பார்கள். அந்த டாட்டாவுக்கும்

பெருமைதான். பஞ்சுபோல வெள்ளைமுடி உடல் முழுவதும் இருக்கும். அவன் முதுகில் தடவினால், பட்டுத் துணியைத் தொடுவதுபோல் இருக்கும். கண்களும் திராட்சைப் பழம் போல குண்டாகத் தெரியும். அது குலைப்பதுகூட கேட்க இனிமையாக இருக்கும்.

ஆனால், புதிதாகப் பார்ப்பவர்கள், பயந்து போவார்கள். அந்த டாட்டாவுடன் தான் அன்பழகன் விளையாடிக் கொண்டு இருந்துவிட்டான். நேரம் போனதே தெரியவில்லை.

கடிகாரத்தில் ஒன்பது மணி அடித்ததும், அவசரமாகப் புறப்பட்டான். புத்தகப் பையைத் தூக்கித் தோளில் மாட்டப் போகும் பொழுது, டாட்டா பையைப் பிடித்து இழுத்தது. அதைத் தள்ளி விட்டான். முன்னால் வந்து நின்றுகொண்டு, அவன் வழியை மறித்தது. அவன் மீண்டும் தள்ளிவிட்டான். அவன் கால்களுக்கு இடையே சுற்றி சுற்றி வந்தது.

அன்பழகனுக்கு கோபம் வந்துவிட்டது. இனிமேல் இப்படி செய்தால் அடிவிழும்' என்று கத்தினான். அப்படியும் டாட்டா விடவில்லை. கூடவே ஓடிவந்தது.

வீட்டுக்கு முன்னால் உள்ள வாசற் கதவை இழுத்து சாத்தினான். 'நான் சாயங்காலம் வரும் வரை வீட்டிலேயே இரு' என்று சொல்லிவிட்டு, அன்பழகன் ஓடினான்.

வெளியே போவதற்கு வேறு பாதையில்லை. அதனால் கதவு பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு டாட்டா யோசித்தது. 'வீட்டிலே போட்டு அடைத்து வைக்க நான் என்ன சின்னக் குழந்தையா'? என்று கேள்வி கேட்டது.

''என் அழகை எல்லோரும் பார்க்க வேண்டாமா? நான் தெருவில் போனால் மற்ற நாய்கள், என்னைப் பார்க்கக் கூடிவிடும். என் பின்னால் ஓடிவரும். வணக்கம் செய்யும்''. என்று நினைத்துப் பார்த்தது. அதற்கு சந்தோஷம் தாங்க முடியவில்லை.

'எப்படியும் பள்ளிக்கூடம் போக வேண்டும். எசமானனை பார்த்துவிட வேண்டும். எனக்கு எவ்வளவு மரியாதை என்று காட்டவேண்டும்' என்று டாட்டா முடிவு செய்தது. ஆனால், வெளியே போகத்தான் முடியவில்லை. வெயில் 'சுள்'ளென்று அடித்தது. ஆனாலும், டாட்டா அப்படியே உட்கார்ந்து இருந்தது. எப்படி தப்பித்து வெளியே போவது என்று யோசனை செய்தது.

பால்காரன் பணம் வாங்குவதற்காக வீட்டிற்கு வந்தான். அவன் வெளிக் கதவைத் திறந்ததும், திமுரென்று ஓட்டம் பிடித்தது டாட்டா. நேராக பள்ளிக்கூடம் போய் சேர்ந்தது. ஆனால், அங்கே எஜமானனைக் கண்டுபிடிக்க முடியவில்லை. எல்லோரும் ஒரே மாதிரி சீருடை போட்டுக்கொண்டிருந்ததால், கண்டுபிடிக்க முடியவில்லை.

விளையாட்டு மைதானத்திற்குச்சென்றது. அங்கே மாணவர்கள் விளையாடிக் கொண்டிருந்தார்கள். இங்கேதான் அன்பழகன் இருக்க வேண்டும் என்று, ஒருமூலையில் நின்றபடி உற்று உற்றுப் பார்த்தது. அன்பழகன், டாட்டாவைப் பார்க்காமல், மும்மரமாக விளையாடிக் கொண்டிருந்தான்.

அவனைக் கூப்பிட்டு, தான் வந்திருப்பதைக் காட்டவேண்டும் என்று விரும்பியது டாட்டா. உடனே சத்தமாகக் குலைக்கத் தொடங்கியது. நாய் குலைப்பதைக் கேட்டு, மாணவர்கள் திரும்பிப் பார்த்தார்கள். வெள்ளைமுடி நாயைப் பார்த்ததும், அவர்களும் ஆச்சிரியத்துடன் பார்த்தார்கள்.

அதில் ஒருவன் டாட்டாவைப் பார்த்தான். 'இந்த நாய்தாண்டா என்னைக் கடிக்க வந்தது! என்று கத்திக் கொண்டே கல்லை விட்டு எறிந்தான். அவன் அடிக்க ஆரம்பித்தவுடன், எல்லோரும் ஆளுக்கொரு கல்லை விட்டு எறிந்தார்கள். கல்லடி பட்ட டாட்டா, கத்திக்கொண்டே ஓடியது.

இதன் சத்தத்தைக் கேட்ட மற்ற நாய்களும் ஓடிவந்தன. புது நாயைப் பார்த்ததும், அவைகளும் கடிப்பதற்காக விரட்டிக் கொண்டு வந்தன. தப்பித்தோம் பிழைத்தோம் என்று வீட்டுக்கு டாட்டா ஓடிவந்தது. பயத்தால் நெஞ்சு 'திக்திக்' என்று அடித்துக் கொண்டது.

அன்பழகன் நாயை அடிப்பதைப் பார்த்து விட்டான். ஆசிரியரிடம் அனுமதி கேட்டுக்

கொண்டு பின்னாலே ஓடி வந்தான். பாவம்! காலில் ரத்தம் ஒழுக டாட்டா படுத்துக் கொண்டிருந்தது. கண்களில் கண்ணீர் ஆறாக ஓடியது.

ஓடி வந்து டாட்டாவைத் தூக்கிக்கொண்டான் அன்பழகன். 'ஏன் இங்கே வந்தாய்' என்று கேட்டான்.

'பள்ளிக்கூடம் வந்து உன்னைப் பார்க்க வேண்டும். என்அழகை உன் நண்பர்களுக்குக் காட்ட வேண்டும்' என்று வந்தேன்' என்றது டாட்டா.

வீட்டில் இருக்கும் வரைதான் உனக்கு மதிப்பும் மரியாதையும். வெளியில் வந்தால் வரவேற்பு இப்படி தான் இருக்கும். என்றான்.

எனக்கு புரியவில்லை என்று டாட்டா சொன்னது.

'ஆமை நீரில் இருந்தால்தான் அழகு. யானை நிலத்தில் நடந்தால்தான் அழகு. பட்டம் காற்றில் பறந்தால்தான் அழகு. புத்தகம் கையில் இருந்தால் தான் அழகு. அதுபோல, நாயும் வீட்டில் இருந்தால்தான் அழகு. வெளியில் வந்தால் ஆபத்துதான்' என்று விளக்கம் கூறினான்.

'இனிமேல் வெளியே வரவே மாட்டேன்' என்று வாலை ஆட்டிவிட்டு காலை நக்கிக் கொண்டது. அன்பழகனும் டாட்டா சொல்லிவிட்டு பள்ளிக்கூடம் புறப்பட்டான்.

# 6. உதவிக்கு உதவி

கன்னத்தில் கைகளை வைத்துக் கொண்டு, கவலையுடன் உட்கார்ந்திருந்தாள் கலா. அதிகமான யோசனை. சிலைபோல உட்கார்ந்திருந்தாள். கண்களிலிருந்து கண்ணீர் வந்து கொண்டே இருந்தது. அதைத் துடைக்கக்கூட முடியவில்லை. அவ்வளவு வருத்தம்.

அடுத்த வீட்டில் வேலைக்காரியாக இருக்கிறாள் கலா. அந்த வீட்டில் எங்கு வேண்டுமானாலும் போகலாம். எந்தப் பொருளை வேண்டுமானாலும் எடுக்கலாம். அவ்வளவு உரிமை அவளுக்கு இருந்தது. ஏன் தெரியுமா? அவள் திருட மாட்டாள். பொய் பேசமாட்டாள். அதனால், அந்த வீட்டில் உள்ளவர்கள் அவளிடம் அன்பாக இருப்பார்கள்.

அந்த வீட்டில் அப்படி இருந்தவளுக்கு என்ன கவலை வந்துவிட்டது? அந்த வீட்டில் உள்ளவர்கள் அனைவரும் அவளைத் திட்டி விட்டார்கள். காரணம்? வீட்டில் உள்ள தங்க வளையல் காணாமல் போய்விட்டது. காணாமல் போனதை, கலா தான்

திருடிக் கொண்டு போய், எங்கேயோ ஒளித்து வைத்து விட்டாள் என்று எல்லோரும் நம்பினார்கள்.

முதலில் பணிவாக அன்புடன் கேட்பது போல் கேட்டார்கள், 'கலா! நீ எடுத்திருந்தால் கொண்டு வந்து கொடுத்து விடும்மா! உன் தவறை நாங்கள் பெரிதுபடுத்தாமல் மன்னித்து விடுகிறோம்!' என்று கேட்டார்கள்.

'நான் எடுக்கவே இல்லை' என்று கலா கூறியதை அவர்கள் நம்பவில்லை, அவர்கள் முகம் கடுமையாக மாறியது, குரலும் கோபமாக வந்தது,

'ஒழுங்காகக் கேட்டால் நீ ஒத்துக் கொள்ள மாட்டாய். உதைத்தால்தான் நீ சரிப்பட்டு வருவாய். வேலைக்கார நாய்களே திருட்டு நாய்கள்தான்' என்று விருந்தாளியாக வந்திருந்த எசமானியின் அண்ணன் தாண்டிக் குதித்து அடிக்க வந்தார்.

வீட்டின் எசமானர் தடுத்து விட்டார், 'கலா மேல் எனக்கு இன்னும் சந்தேகம் வரவில்லை, அவள் வந்து ஆறு மாத காலம் ஆகிறது. இதுவரையில் இப்படி எந்த பொருளும் காணமற் போனதில்லை, கழட்டி வைத்த தங்க வளையல் காணமற் போனது ஆச்சரியமாகத்தான் இருக்கிறது' என்று அவர் சாந்தமாகப் பேசினார்,

எப்பொழுதும் படபடவென்று பேசும் எசமானியோ அன்று மிகவும் அமைதியாகவே இருந்தாள், காணமல் போனது அவளுடைய தங்க வளையல்தானே!

தன் கணவனைப்போல் சாந்தமாகவும் பேசவர வில்லை. தன்னுடைய அண்ணன் போல் முரட்டுத்தன மாகக் கோபித்துக் கொள்ளவும் அவளால் முடிய வில்லை,

'போலீசில் புகார் கொடுத்தால் போதும். கூட்டிக் கொண்டு போய் நாலு போடு போட்டால், உண்மை யைக் கக்கி விடுவாள்' என்று மீண்டும் விருந்தாளி வேகமாகப் பேசினர்,

கலா குனிந்த தலை நிமிரவில்லை. தன் கெட்ட காலத்தை நினைத்து வருந்தினள். கண்ணீர் மளமள வென்று அருவியாய் பெருகி, கன்னத்தின் வழியாக வழிந்தது.

'நீலிக்குக் கண்ணீர் நெற்றியிலே' என்று அப்புறமும் அவர் துள்ளிக் குதித்துக் கத்தினர்,

இனிமேல் கலா இங்கே இருந்தால், அவளை அடித்தாலும் அடித்துவிடுவார். ஒரு குற்றவாளி தண்டிக்கப்படாமல் போனலும் போகலாம். ஒரு நிரபராதி தண்டனை அடையக் கூடாது என்பதில் குறியாக இருந்த எசமானர், கலாவை அழைத்தார்.

'கலா நான் உன்னைச் சந்தேகிக்கவே இல்லை. இன்று மாலைக்குள், உன்னல் முடிந்தால் தங்க வளைய லுடன் வீட்டிற்குள் வா! இல்லாவிட்டால் வராமல் இருந்துவிடு' என்று அன்போடு, ஆனல் கண்டிப்பான குரலில் போகச் சொல்லி விட்டார்.

என்ன சொன்னாலும் அவர்கள் கேட்க மாட்டார்கள், எந்த சாமி மேல் சத்தியம் செய்தாலும் அவர்கள் ஏற்றுக் கொள்ள மாட்டார்கள். தன்னுடைய ஏழ்மை தான் அவர்களை அப்படி நினைக்கத் தூண்டுகிறது. தன்னுடைய நேர்மையை அவர்கள் நம்பாத பொழுது தான் பேசுவதால் எந்தப் பயனும் இல்லை' என்று நினைத்தபடி வீட்டை விட்டு வெளியேறினாள்.

நேரே தன்குடிசை வீட்டுக்குச் சென்று இந்த திருட்டு நிகழ்ச்சியைத் தன் பெற்றோரிடம் கூறவும் அவளுக்கு தைரியமில்லை. அதனால்தான், தான் எப்பொழுதும் உட்கார்ந்து ஓய்வெடுக்கின்ற கல்லின் மீது போய் உட்கார்ந்து கொண்டாள்,

கன்னத்தில் கைவைத்தவாறு, 'என்ன செய்தால் தன்மேல் ஏற்பட்ட கெட்ட பெயர் போகும்? தங்க வளையல் எங்கே போயிருக்கும்? யார் வீட்டிற்குள் வந்திருப்பார்? எப்படி காணமல் போயிருக்கும்?

இப்படியாக யோசனை செய்து கொண்டிருந்தாள் கலா. திடீரென்று கோழிக் குஞ்சுகள் அலறுகின்ற சத்தம். படபடவென்று இறக்கைகள் அடித்துக் கொள்ளும் சத்தம்,

கண்விழித்துப் பார்த்தாள் கலா. ஒரு சிறு கோழிக் குஞ்சினைக் காகம் தன் கால்களுக்கு இடையே வைத்துத் தூக்கிப் பறப்பதைப் பார்த்தாள்.

என்ன நினைத்தாளோ கலா! அவளுக்கு எப்படி அந்த வேகம் வந்ததோ! அவளுக்கே தெரியாது.

பக்கத்தில் கிடந்த ஒரு கல்லை எடுத்து காக்கை யின் மேல் எறிந்தாள், அது யாருடைய அதிர்ஷ்டமோ, கல் சரியாக காக்கையின் தலை மீது பட்டது. அடி பட்ட காகம் தடுமாறிக் கீழே விழுந்தது.

உடனே தாய்க்கோழி பாய்ந்து சென்று காக்கை யின் தலையின் 'நறுக் நறுக்' என்று நான்கு கொத்துகள் கொத்தின. காக்கை பரிதாபமாகக் கத்திக் கொண்டே சுருண்டு விழுந்தது.

தாய்க்கோழியைப் பார்த்தாள் கலா. அதன் சத்தத்தில் சந்தோஷம் தெரிந்தது. அதற்கு உதவி செய்ய தன்னால் முடிந்ததை நினைத்து, அவள் தன் கவலையையும் மறந்து சந்தோஷப் பட்டாள்.

பிறருக்கு உதவி செய்யும்பொழுது தனக்குள்ள கவலை திடீரென்று மறைந்து போனதை நினைவு படுத்திக் கொண்டாள். இனிமேல் பிறருக்கு உதவி செய்வது தான் தனது முக்கிய கடமையாக இருக்க வேண்டும் என்றும் அவள் முடிவு செய்து கொண்டாள்.

இப்படி நினைத்துக் கொண்டிருந்த கலாவிடம் தாய்க்கோழி வந்தது. தன் குஞ்சினைக் காப்பாற்றித் தந்ததற்காக நன்றி கூறிக் கொண்டது.

'நான் என்ன செய்து விட்டேன். ஆத்திரத்தில் கல்லை எடுத்து வீசினேன். அதிர்ஷ்டவசமாக காக்கை மேல் பட்டுவிட்டது. அவ்வளவுதான்' என்றாள் கலா.

அப்படி எறிவதற்கும் உதவ முன்வருவதற்கும் நல்ல மனம் வேண்டுமே! என்றது கோழி.

'இப்படித்தான் ஆறு மாதமாக ஒரு வீட்டில் நாயாக கிடந்து உழைக்கிறேன். அதற்கு பிரதி பலனாக, என் மேல் திருட்டுப் பட்டம் கட்டிவிட்டார்கள் என் எசமானனும் எசமானியும். எனக்கு அதிர்ஷ்டம் அவ்வளவுதான்'' என்றாள் கலா!

'ஓகோ! அதுதான் கன்னத்தில் கையை வைத்துக் கொண்டு கவலையுடன் உட்கார்ந்திருந்தீர்களா? உங்கள் கவலையை கொஞ்சம் விளக்கமாகச் சொல்லுங்களேன்' என்று தாய்க்கோழி கேட்டுக் கொண்டது.

திருட்டுப்போன வளையலைப் பற்றி தாய்க்கோழியிடம் சொல்வதால் என்னபயன் என்று யோசித்தாள்.

அப்பொழுது கோழிக் குஞ்சுகள் அந்தக் குப்பை மேட்டைக் கலைத்து இரை தேடிக் கொண்டிருந்தன. நெல்மணிகளைப் பொறுக்குவதற்காக கால்களால் குப்பையைக் கிளறியபொழுது ஒரு குஞ்சின் கால்களில் ஏதோ சிக்கிக் கொள்ளவும் அது பயந்துபோய் சத்தம்போட, தாய்க் கோழி என்னவென்று பார்ப்பதற்காக அருகில் ஓடியது.

என்ன ஆச்சரியம்! அங்கே தங்க வளையல் ஒன்று கிடந்தது.

கலாவின் கண்கள் ஆச்சரியத்தால் விரிந்தன. தாய்க்கோழி தங்க வளையலைக் கொத்திக் கொண்டு வந்து அவள் காலடியில் வைத்தது.

இந்தத் திருட்டுக் காக்கை வீட்டிற்குள் புகுந்து எதையாவது தின்பதற்காக திருடிக் கொண்டு வந்து இந்த மரத்தின் மேல் உட்கார்ந்து கொண்டுதான் தின்னும். இன்று எதையோ எடுத்துக் கொண்டு வந்து மரத்தில் உட்கார்ந்த பொழுது நானும் பார்த்தேன். சூரிய வெளிச்சத்தில் மின்னியது. அது தங்க வளையல் என்று இம்பொழுதுதானே தெரிகிறது! என்றது கோழி.

எப்படியோ என் மீது வந்த திருட்டுக் குற்றம் போய்விட்டது. இப்பொழுதே ஓடிப்போய் எசமானியிடம் தரப்போகிறேன் என்றாள் கலா!

'சீக்கிரம் போங்கள்! பட்டினி கிடந்து செத்தாலும் சாகலாம். திருட்டுப் பட்டம் சுமந்து கொண்டு ஒரு நிமிஷம் கூட வாழக் கூடாது' என்றது கோழி. உழைத்துச் சாப்பிடுவதில் உள்ள சுகம், ஏமாற்றி வாழ்வதில் இல்லை என்றதும் கலா சந்தோஷத்துடன் ஓடினாள்.

தன் குஞ்சின் உயிரைக் காத்த கலாவுக்குத் தன்னால் உதவி செய்ய முடிந்ததே! இந்த வாய்ப்பைக் கொடுத்த இறைவனுக்கு நன்றி என்று கூறி கோழி மகிழ்ந்தது.

# 7. விருந்து சாப்பாடு

நாராயணன் பார்த்துக் கொண்டே இருந்தார். அந்த நாய் சாப்பிடுவதைத்தான், நாராயணன் ஆவலுடன் பார்த்துக் கொண்டே இருந்தார்.

அந்த நாய்க்கு அவர்தான் சோறு போடுவார். ஒவ்வொரு வேளையும் அவர்தான் அதன் அருகில் இருந்து சோறு போட்டு, அது சாப்பிட்டு முடிக்கும் வரை பார்த்துக் கொண்டேயிருப்பார். தானே அதை மிகவும் கவனமாகப் பார்த்துக் கொள்வார்.

வேலை காரணமாக வெளியே போனால் கூட, வீட்டுக்கு வந்ததும், உடனே ஓடிவந்து நாயைத்தான் பார்ப்பார். நன்றாகச் சாப்பிட்டதா, தூங்கியதா என்று தன் மனைவியை கேட்பார். அதற்குப் பிறகுதான் தன் மகன் மனோகரனைப் போய் உடல் நலம் விசாரிப்பார்.

இப்படி அந்த நாய்க்கு விருந்தும் உபசரிப்பும் இருந்தது. புதிதாக வாங்கி வந்த அல்சேஷன் நாயா? அல்லது வெளிநாட்டிலிருந்து கொண்டுவந்த விலை உயர்ந்த நாயா? அப்படி ஒன்றும் தெரியவில்லையே அந்த நாயைப் பார்த்தால்!

அதைப் பார்த்தால் ஒரு தெரு நாய் மாதிரி அல்லவா தெரிகிறது! ஆமாம்! அது தெரு நாய்தான்! அந்த தெருநாயைத்தான் நாராயணன் வீட்டுக்குக் கொண்டு வந்து, வாசலில் கட்டிப்போட்டு, காவல் வைத்து, அறுசுவை உணவு வைத்து, அருமை பெருமையாகக் காப்பாற்றி வருகிறார்.

இத்தனைக்கும் காரணம் இருக்கத் தான் இருந்தது. அந்த நாய், நாராயணன் மகன் மனோகரனைக் காலில் கடித்துவிட்டது. கடைவீதிக்கு காய்கறிகள் வாங்கப்போன அந்தப் பையனை, இந்தத் தெருநாய் திடீரென்று ஓடிவந்து கடித்து விட்டது.

பதறிப்போனார்கள் மனோகரனின் பெற்றோர்கள். கஷ்டப்பட்டு ஓடி, அந்த நாயைப் பிடித்து விட்டார் நாராயணன். அந்தத் தெருநாய் ஒருவேளை வெறி நாயாக இருந்தால் என்ன செய்வது?

அந்தப்பயத்தில் தான் நாயைக் கொண்டுவந்து வீட்டில் கட்டிப்போட்டு விட்டார். இருபத்தியொரு நாட்கள் கண்விழித்து ஊழியம் புரிந்தார். மகனுக்கும் இடுப்பைச் சுற்றி ஊசிகள் போட்டு வைத்தார். மகனும் பிழைத்துக்கொண்டான். நாயும் சாகவில்லை.

கட்டி வைத்திருந்த கயிற்றை அவிழ்த்து விட்டு, நாயை ஒரு அடி போட்டு விரட்டி அடித்தார், அதன் பிறகு பெருமூச்சு விட்டார். ஆமாம்! அது அவரது நிம்மதிப் பெருமூச்சு.

அந்த நாயோ ஆனந்தப் பெருமூச்சு விட்டுக் கொண்டே தார்சாலையில் ஓடிக் கொண்டிருந்தது. நல்ல வெயில் நேரம். எங்கேயாவது நிழலில் படுத்து நிம்மதியாகத் தூங்க வேண்டும் என்றுதான் அந்தத் தெருநாய் வேகமாக ஓடியது.

வேப்ப மரமொன்று விரிந்து பரந்து நின்றது. அதன் கீழே போய் படுத்து உறங்கிவிட்டு, அடுத்து என்ன செய்வது என்று திட்டம் போடவேண்டும் என்று முடிவு செய்தது.

இந்தத் தெரு நாய்க்கு என்ன திட்டம் இருக்கிறது! ஆமாம் அதற்கும் திட்டம் இருக்கிறதே! அது போட்ட திட்டப்படி தானே, இத்தனை நாளும் அதற்கு விருந்து நடந்து வந்தது நாராயணன் வீட்டில்.

அந்தத் தெருநாய் அதற்கு முன்பாக ஒரு வீட்டு நாயாகத்தான் இருந்தது. அதன் எஜமானர் வடிவேலன். அதைப் பிரியமாகத்தான் வளர்த்து வந்தார். போட்ட சாதத்திற்கு மேல் போதாது என்றோ என்னவோ, அது ஆள் இல்லாத நேரம் பார்த்து. சமையற்கட்டில் புகுந்து, திருடித் தின்னத் தொடங்கியது.

பொறுத்துப் பார்த்தார் வடிவேலன் ஒரு நாள் அதை அடியோ அடி என்று அடித்து.வீட்டை விட்டுத் துரத்தி விட்டார். தெரு நாயாகிவிட்ட பிறகு அலைந்து பார்த்த அந்த நாய், ஒருநாள் திட்டம்

போட்டது. தீர்மானம் எடுத்துக் கொண்டது. தைரிய மாகவும் நடந்து கொண்டது.

அதாவது, வசதியான வீட்டுப்பையனுக ஒருவனைப் பார்த்து மெதுவாகக் கடித்து வைப்பது. தன்னை வெறிநாய் என்று பயந்து அந்த வீட்டிலுள்ளவர்கள் கட்டிப்போட்டு. உணவு கொடுப்பார்கள். நன்றுகச் சாப்பிடலாம் என்பதுதான் நாயின் திட்டம்.

முதலில் ஒரு வீட்டின் முன்னுல் ஒரு பையனைக் கடித்து விட்டது. அந்த வீட்டில் அந்த நாய்க்கு அமர்க்களமான விருந்து சாப்பாடு. மெலிந்த நாயின் உடல் கொஞ்சம்கொஞ்சமாகத் தேறத் தொடங்கியது.

அந்தத முறையாகத்தான் நாராயணன் மகன் மனோகரனைக் கடித்தது. கறியும் சோறும் தினம் தினம் சாப்பிட சாப்பிட, நாயின் உடல் மெருகேறியது. மினுமினுப்பும் கொண்டது.

அடுத்து என்ன செய்யலாம் என்றுதான் வேப்ப மரத்தின் நிழலில் அமர்ந்து திட்டம் போட்டுக் கொண்டிருந்தது. தெருநாயான பிறகு அதற்கு புதிய நட்பு ஒன்று கிடைத்திருந்தது. அந்தக் கறுப்பு நாயும் அங்கே எதிர்பாராத விதமாக வந்து சேர்ந்தது.

கறுப்புநாயிடம் தன் உடம்பைக் காட்டியது. தனது அழகைப் புகழ்ந்து கூறியது. வாயைப் பிளந்து காட்டி, சாப்பிட்ட சோற்று வகையின் பட்டியலை விவரித்தது. இப்படியே தன் எதிர்காலம் முழுவதும்

நடைபெறும் என்று தன் நண்பனிடம் பெருமையாகப் பேசிக்கொண்டிருந்தது.

'மற்றவர்களின் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொண்டு ஏமாற்றி வாழ்வதும் ஒரு வாழ்வா?' என்று கறுப்பு நாய் கேட்டது.

'இப்படிப் பாவ புண்ணியம் பார்ப்பதால்தான், நீ எலும்பும் தோலுமாக இருக்கிறாய். என்னைப் போல் நீயும் யாரையாவது கடித்துவிட்டு சுகமாக இரு! என்று புத்திமதி கூறியது.

அய்யய்யோ! நான் மாட்டேன்! உன் யோசனையை நீயே வைத்துக் கொள். நாளைக் காலையில் உன்னை இங்கே சந்திக்கிறேன்'. என்று சொல்லி விட்டுக் கறுப்பு நாய் ஓடிவிட்டது.

'ஒன்றும் வேலையில்லை. ஆனால் நாய்க்கு உட்கார நேரமில்லை' என்று சொல்லிவிட்டுத் தெரு நாய் கேலியாகச் சிரித்தது.

அடுத்த நாள் மாலை நேரம். கறுப்பு நாய் ஏதோ ஒரு எலும்புத்துண்டை கடித்தபடி, வேப்பமரத்தடியில் தெருநாய்க்காகக் காத்துக்கொண்டிருந்தது. கொஞ்ச நேரங்கழித்து யாரோ முனகுவது போல் சத்தம் கேட்டது. பக்கத்தில் எதுவும் தெரிய வில்லை.

இன்னும் கொஞ்சம் கூர்ந்து கவனித்தது. அங்கே ஒரு பள்ளத்தில் தெருநாய் கிடந்தது. முக மெல்லாம் காயம். வாயிலே ஒரு பல்லைக் கூட காண

வில்லை. பின்னங்கால் இரண்டும் ஒடிந்தது போல கிடந்தன,

அய்யோ என்ன ஆயிற்று இதற்கு? லாரி ஏதாவது இதன்மேல் ஏறிவிட்டதா? எப்படி இதற்கு இந்த நிலைமை ஏற்பட்டது என்று கறுப்பு நாய் பக்கத்திலே போய் நின்று கேட்க முயற்சித்தது.

யாரோ இருவர் பேசிக் கொண்டு அங்கே வருவது தெரிந்தது. கறுப்புநாய் பக்கத்துப் புதரில் போய் மறைந்து கொண்டது.

நாராயணா! இங்கே பார்! இந்த நாய்தான், பள்ளிக்கூடத்துக்குப் போய்வந்த என் மகனை காலில் கடித்து விட்டது. இதைப் பிடித்துக் கொண்டு போய் கட்டிப் போட்டு, உலக்கையை எடுத்து நான்கு அடி. அவ்வளவுதான். கொண்டு வந்து இழுத்துப் போட்டு விட்டுப் போய்விட்டேன்.

'அடடே! இந்த நாயா! இதுதானே என் மகனை யும் கடித்தது'. இதற்கு இதுதான் வேலை போலும்' என்று நாராயணன் கூறினார்.

இனிமேல் இது யாரையும் கடிக்காது. பல் இருந்தால்தானே கடிக்கும். எல்லாவற்றையும் அடித்தே கழற்றி விட்டேன்.

இனிமேல் நடக்கவும் முடியாது. கடிக்கவும் முடியாது என்று சத்தம்போட்டு சிரித்தார், அந்த ஆள் கசாப்புக் கடைக்காரன் என்னிடமா இதன் வேலை.

நடக்கும் என்று அவன் பேசியது கேட்க பயங்கரமாக இருந்தது.

வடிவேலனும் சிரித்தார். நாராயணனும் சிரித்தார். அவர்களுக்கு இப்பொழுது தான் மனம் குளிர்ந்தது.

அவர்கள் போனதும் கறுப்பு நாய் அந்தப் புதரை விட்டு வெளியே வந்தது.

ஆள் தெரியாமல் போய் கடித்து விட்டாயே! உன்னை அறுத்தே போட்டிருப்பானே! நல்ல வேளை பிழைத்துக்கொண்டாய் என்று கறுப்புநாய் கூறியது.

இப்படி நடக்கும் என்று தெரியாமல் போய்விட்டதே! இனி நான் என்ன செய்வேன் என்று அழுதது தெரு நாய்.

'செய்த தவறுக்கு தண்டனை கிடைத்து விட்டது. இனிமேலாவது ஒழுங்காக இரு. உன்னுடன் இருந்தால் என்னையும் அடிப்பார்கள். இருந்தாலும், ஆபத்து நேரத்தில் காப்பதுதானே நண்பனின் வேலை! வா ஆஸ்பத்திரிக்குப் போகலாம்' என்று கறுப்பு நாய் அதனை அழைத்தது. ஏமாற்றிப் பிழைப்பவர்கள் எல்லாம் கடைசியில் இப்படித்தான் ஆவார்கள் என்றது கறுப்பு நாய்.

'இனிமேல் ஒழுங்காக இருப்பேன்' என்று கால்களை இழுத்துக் கொண்டே தெரு நாய் நடந்து சென்றது பார்க்கப் பரிதாபமாக இருந்தது.

## 8. ஆசையோ ஆசை!

ஆசை யாரைத்தான் விட்டது? இந்த உலகத்திலே அத்தனை பேரையும், இந்த ஆசை தான் ஆட்டி வைத்துக் கொண்டிருக்கிறது.

யாருக்கு எப்படிப்பட்ட ஆசை, எந்த நேரத்தில் எவ்வாறு வரும் என்று யாருக்கும் தெரியாது. அப்படித் தெரியாமல் வருகின்ற ஆசை, என்னென்ன துன்பங்களைத் தரும் என்று, ஆசைப்படுவர்களுக்கு முதலில் தெரியாது. அது போகப் போகத்தான் தெரியும். புரியும்.

அந்த பெரிய காட்டிலே வாழ்கின்ற மிருகங்கள் அத்தனைக்கும் அப்படி ஓர் ஆசை வந்து விட்டது. அங்கே பாருங்கள்! எல்லா மிருகங்களும் வேகமாக நடந்து போய்க் கொண்டிருக்கின்றன

உயர்ந்து நிற்கின்ற ஓர் ஆலமரத்தை நோக்கித் தான் நான்கு பக்கங்களிலிருந்தும், அவைகள் போய்க் கொண்டிருக்கின்றன. அங்கே ஓர் உயர்ந்த மேடை இருக்கிறது. அங்கு தான் அவைகள் போய்க் கொண்டிருக்கின்றன.

இன்னும் கொஞ்சம் கூர்ந்து பாருங்கள் புரியும். அவற்றின் நடையில் ஒரு மாறுதல் தெரியும். ஆமாம்! அவற்றின் நடை ராஜா நடை போல் தெரியுமே!

எல்லா மிருகத்துக்கும், தான் தான் ராஜாவாகப் போகிறோம் என்கிற நினைப்பு வந்து, ஆசையைத் தூண்டி விட்டு விட்டது. இன்னும் ஒரு மணி நேரத்தில் யார் ராஜாவாக ஆகப் போகிறார் என்பது தெரிந்து போய் விடும்!

அப்படி என்ன அவசரம் வந்து விட்டது என்று காரணம் சொன்னால் தானே உங்களுக்கும் புரியும். அந்தக் காட்டிற்கு ஒரு ராஜா வேண்டும். அதுவும் உடனடியாக வேண்டும் என்று காட்டு மிருகங்கள் முடிவு கட்டி விட்டன.

காட்டிலுள்ள மிருகங்கள் எல்லாம் அந்த ஆலமரத்தடியில் கூடிவிட்டன. ஒரு நரி மேடையில் ஏறி, எல்லோருக்கும் வணக்கம் சொல்லிக் கூட்டத்தைத் தொடங்கி வைத்தது.

தோழர்களே! நமது சிங்க ராஜாவுக்கு வயதாகி விட்டது. அதாவது கிழமாகிப் போய் விட்டது. தனக்கு இரைதேடக்கூட முடியாமல், குகையிலே ஒரு மூலையிலே படுத்துக் கிடக்கும் சிங்கத்தை நம்பி, நாம் இனிமேல் வாழ முடியாது. அதனால், நம்மைக் காப்பாற்றும் சக்தியுள்ள ஒருவரை இப்பொழுது ராஜாவாகத் தேர்ந்தெடுக்கவே, இங்கு நாம் கூடியிருக்கிறோம்.

நரி சொன்னதை எல்லா மிருகங்களும் சரி சரி என்றன. கிழட்டுச் சிங்கம் என்றதும் சிரி சிரி என்று எல்லாம் சிரித்தன,

'யார் ராஜா' என்பதை முடிவு எடுப்பதற்காக கரடியார் வந்து தலைமை தாங்கி நடத்திக் கொடுக்கும் படி கேட்டுக் கொள்கிறேன் என்று கூறி விட்டு நரி உட்கார்ந்து கொண்டது.

கரடி மேடையில் வந்து ஏறி நின்றது. மேடையைச் சுற்றி ஒரு பார்வையை வீசியது. கரடி கண்களில் படவேண்டும் என்பதற்காக, எல்லா மிருகங்களும் முண்டியடித்துக் கொண்டு முன்னுக்கு வந்தன.

'அவரவர் இடத்திலேயே இருங்கள்' என்று கரடி கத்தியது. மிருகங்கள் முன்னேறி வராமல் சிரமப்பட்டு கீழேயே நின்றுகொண்டன. இப்பொழுது கரடி பேசத் தொடங்கியது.

''நமக்கெல்லாம் ராஜாவாக ஒருவர் வர வேண்டும். யார் யார் ராஜாவாக வரவேண்டும் என்று விரும்புகின்றீர்களோ, அவர்களெல்லாம் மேடைக்கு வரலாம்'' என்று கரடி சொன்னதுதான் தாமதம்! எல்லா மிருகங்களுமே மேடையில் ஏறத் தொடங்கின.

இருப்பதோ சிறிய மேடை. எப்படி இடம் போதும்? ஒன்றையொன்று தள்ளிக் கொண்டு மேடை மீது நிற்பதற்காக எல்லாமே முயன்றன அதாவது

மேடையில் நின்ருலே ராஜாவாகி விடலாம் என்ற நம்பிக்கையுடன் எல்லாம் ஏறிக்கொண்டன.

வலிமையுள்ள மிருகங்கள் சிறு சிறு மிருகத்தைக் கீழே தூக்கி எறிந்தன. கொஞ்சம் வலுவுள்ள மிருகங்கள் ஒன்றையொன்று பிடித்துத் தள்ளிக் கொண்டன. புலி உறுமியது. கழுதை கத்தியது. யானை பிளறியது. நரி ஊளையிட்டது. இதை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த பறவைகளும் சந்தோஷத்தால் சத்தம் போட்டுச் சிரித்தன. மிருகங்களின் கூச்சல் ஒருபுறம், பறவைகளின் சிரிப்பு மற்ருருபுறம். இப்படியாக காடே பேய்க் கூச்சலால் எதிரொலித்துக் கொண்டிருந்தது.

'அமைதி அமைதி' என்று காடி கத்திப் பார்த்தது. 'இனிமேல் சத்தம் போட்டால், உங்களை அடித்துக் கொன்று விடுவேன்' என்று புலி உறுமிப் பார்த்தது. 'தும்பிக்கையால் தூக்கி எறிந்து, காலில் போட்டு மிதிப்பேன்' என்று யானை எச்சரித்துப் பார்த்தது.

ஒட்டகம் தலையால் மோதி மோதி எல்லா மிருகங் களையும் உட்கார வைக்க முயன்றது. இப்படியாக பலப்பல மிருகங்கள் பலப்பல வழிகளில் முயன்றன,

அடக்க அடக்க சத்தம் அதிகமாகியது. கூச்சல் மிருதியாகியது. குழப்பம் நிறைந்து காணப்பட்டது. ஒன்றுக்கொன்று இப்பொழுது கோபத்தால்

சண்டை போட்டுக் கொண்டிருந்தன, கரடியோ பயந்து கொண்டு பின் வாங்கியது.

இனிமேல் என்ன செய்வது? என்று முக்கியமான சில மிருகங்கள் யோசித்துக் கொண்டிருந்தன. இனிமேல் அடக்கவே முடியாது என்றும் முடிவு கட்டி விட்டன.

அப்பொழுது ஒரு சத்தம்-- "

சத்தம் அல்ல... கர்ஜனை.

யார் சத்தம் போடுவது! அமைதியாக இருங்கள்! என்று ஒரு அதட்டல்!''

அவ்வளவு தான். மிருகங்கள் வாயைமூடிக் கொண்டன. சிறு சப்தம் கூட எழவில்லை.

சண்டை போட்டுக் கொண்டிருந்த சில மிருகங்கள் கூட மேடையை விட்டு இறங்கிவிட்டன. இப்பொழுது மேடையில் யாருமே இல்லை.

மெதுவாக கிழட்டுச் சிங்கம் மேடையில் ஏறி வந்தது. எல்லா மிருகங்களும் தலையைத் தாழ்த்தி வணக்கம் செய்தன.

கரடி மேடைக்கு வந்தது.

ராஜாவாக வரவேண்டும் என்று எல்லோருக்குமே ஆசை இருந்தது. ஆசை இருந்து என்ன பயன்? அதற்கேற்ற ஆற்றல் யாரிடமும் இல்லையே!

கூச்சல் போட்ட மிருகங்களையே கட்டுப்படுத்த முடியவில்லை என்றால், நாட்டையே எப்படி ஆள முடியும்!

ஒரே கர்ஜனை! காட்டுக்கூச்சல் அடங்கியது. அமைதி நிலவியது. அத்தகைய ராஜ கம்பீரம் உள்ள ஆற்றல் மிக்க சிங்கத்தையே நாம் ராஜாவாக ஏற்றுக் கொள்வோம்! உங்கள் கருத்து என்ன? என்று கரடி கேட்டது.

ஆமாம்! ஆமாம்! 'சிங்கம் தான் நமக்கு ராஜா! என்று எல்லா மிருகங்களும் ஒரே மனதாக ஏற்றுக் கொண்டன.

கிழட்டுச் சிங்க ராஜா, இப்பொழுது மேடையிலே கம்பீரமாக நின்றது.

தகுதியுடன் ஆசை இருந்தால் தான் மதிப்பும் பெருமையும் கிடைக்கும். அறிவும் ஆற்றலும் இல்லாத அற்ப ஆசையால் அவமானமே கிடைக்கும் என்று கரடி விட்ட கரடியை, எல்லா மிருகங்களுமே தலை ஆட்டி ஆமோதித்தன.

# 9. தெய்வமலர்

அழகான கோழிக்குஞ்சு அது. நல்ல மஞ்சள் நிறம் உடையது. குப்பை மேட்டில் தனியாக நின்று, குப்பையைக் கிளறிக் கொண்டிருந்தது.

ஏதாவது நெல்மணி கிடைத்தால், உடனே அதை கொத்தித் தின்னாமல், சுற்றுமுற்றும் பார்க்கும். கம்பீரமாகக் குரல் கொடுக்கும். பிறகு அந்த மணியை வெடுக்கென்று விழுங்கும்.

அந்தக் கோழிக்குஞ்சு அப்படி ஏன் பார்க்கிறது? யாரையோ அது எதிர்பார்க்கிறது! யாரை!

பல கோழிக் குஞ்சுகள் போடும் சத்தம் கேட்கின்றனவே! இதோ பக்கத்தில் வந்தாகி விட்டது. கூடவே தாய்க் கோழியும் வருகிறது. அதன் இறக்கைக்குள்ளே புகுந்து கொண்டே எல்லா குஞ்சுகளும் வருகின்றன.

ஒன்றிரண்டு குஞ்சுகள் ஒன்றுக்கொன்று மோதிக் கொண்டு கீழே விழுகின்றன. பின்னர் எழுந்து கொண்டு, தாய்க்கோழி போகும் திசை பார்த்து ஓடுகின்றன.

மஞ்சள் நிறக் கோழிக்குஞ்சு விழுந்து விழுந்து சிரித்தது. இப்படியும் தாய் பைத்தியங்கள் இருக்கலாமா என்று கேலி பேசியது.

தூர இருந்து தாய்க் கோழி மஞ்சள் குஞ்சினைக் கூப்பிட்டது. 'தனியாக நிற்கிறாயே! ஓடிவந்து எங்களுடன் சேர்ந்து கொள்' என்று கூப்பிட்டது.

வரமாட்டேன்! வரமாட்டேன்! வரமாட்டேன் என்று மஞ்சள் குஞ்சு அழுத்தந் திருத்தமாகக் கத்தியது. ஏன் வரமாட்டாய்? என்று தாய்க்கோழி கேட்டுக் கொண்டே அருகில் வந்தது.

'உங்கள் கூட நான் சேர மாட்டேன். நான் தனியாகவே இரை தேடிக் கொள்கிறேன்' என்று குஞ்சு கூறியது.

''உன் தாய் நானிருக்கிறேன். உன்னுடைய சகோதர சகோதரிகள் எல்லாம் என் கூடவே தான் இருக்கின்றனர்: நான் குப்பையைக் கிளறி விடுகிறேன். இரையைத் தேடித் தருகிறேன். எல்லாம் உண்டு மகிழ்கின்றன, நீயும் என் கூடவா' என்று அழைத்தது.

''அந்தக் குஞ்சுகளுக்கு அறிவும் இல்லை. பலமும் இல்லை. குப்பையைக் கிளறவும் தெரியாது. இரையைக் கண்டுபிடிக்கவும் புரியாது. அதனால் தான் உங்களை நம்பியே ஓடி வருகின்றன.

ஆனால் எனக்கோ எல்லாம் தெரியும். உங்களைப் போலவே வேகமாகக் குப்பையைக் கிளற முடியும். இரை தேட முடியும். உங்கள் தயவு எனக்குத் தேவையில்லை. உங்கள் துணையும் எனக்கு வேண்டாம்'' என்று கோழிக்குஞ்சு கோபமாகக் கூறியது.

இத்தனைக்கும் தாய்க் கோழி என்ன கூறி விட்டது? ஒன்றுமே தவறுதலாகக் கூட சொல்லவில்லையே!

'சேர்ந்து என் கூடவே வா! அங்கே இங்கே தனியாகப் போகாதே! தனியே போனால் ஆபத்து' என்று கூறி தடுத்தது தான், அந்தத் தாய் செய்த குற்றம்.

பல முறை தாய்க் கோழி அழைத்துப் பார்த்தது. பின்பு கோபமாக அதட்டிப்பார்த்தது. அதற்கும் அடங்கவில்லை அந்த மஞ்சள் குஞ்சு.

அதனை தனியே விட்டு விட்டுப் போகவும் தாய்க் கோழியால் முடியவில்லை. எப்படி மனம் வரும்? 'பெத்தமனம் பித்து, பிள்ளை மனம் கல்லு' என்பார்களே, அதற்கு அப்படித்தான் இருந்தது.

கோழிக்குஞ்சோ தன் தாயை எப்படியெல்லாம் ஏளனமாகப் பேசவேண்டுமோ, அப்படியெல்லாம் பேசி அவமானப்படுத்தியது.

ஆரம்பத்திலே அதட்டி மிரட்டி வைத்திருந்தால், இப்படி இந்த சிறு குஞ்சு பேசாதே! நாம் அதிகமாக செல்லம் கொடுத்து கெடுத்து விட்டோம். இனி என்ன செய்ய முடியும்? அமைதியாகத் தான் திருத்த வேண்டுமே ஒழிய, ஆத்திரப்பட்டு எதுவும் செய்து விடக் கூடாது என்று தாய்க் கோழி முடிவு செய்து கொண்டது. வேறு வழி இல்லையே!

அன்றும் அப்படித் தான் மஞ்சள் குஞ்சு, தனியாகப் போய் வேலி ஓரத்தில் குப்பையைச் கிளறிக் கொண்டிருந்தது. தாய்க் கோழியோ தன் மற்ற குஞ்சுகளுடன் இரை தேடிக் கொண்டிருந்தது.

திடீரென்று ஒரு சத்தம். கூக்குரல். மஞ்சள் குஞ்சு தான் அப்படிக் கத்தியது. தாய்க் கோழி நிமிர்ந்து பார்த்தது. ஒரு கருடனின் கால்களுக் கிடையிலே மஞ்சள் குஞ்சு சிக்கிக் கொண்டிருந்தது.

பாய்ந்து பறந்த வேகத்தில், கோழிக்குஞ்சைப் பிடித்த கருடன், அதை அறியாமலேயே பக்கத்தில் இருந்த வேலியின் மீது மோதிக் கொண்டது. அதனால் அடிபட்டு விட்டது.

இதன் காரணமாக, திடீரென மேல் நோக்கிச் கருடனால் எழுந்து பறக்க முடியவில்லை. கோழிக் குஞ்சின் பிடியையும் விட்டு விடாமல் சற்று மேலே

பறக்கத் தொடங்கியது தான் தாமதம். தாய்க்கோழி பார்த்து விட்டது.

திடீரென புயல் போல தாய்க்கோழி மேலே பறந்தது. பாய்ந்து கருடனைத் தாக்கியது. தனது வலிமையையெல்லாம் சேர்த்து, தன் கோழிக் குஞ்சைப் பிடித்திருந்த கருடன் கால்களில் வேக மாகக் கொத்தியது.

தாய்க்கோழியின் நோக்கம் வீண்போகவில்லை. அதன் முயற்சி வெற்றியடைந்தது. வலி தாங்க முடியாத கருடன், கோழிக் குஞ்சைக் கீழே போட்டு விட்டுத் 'தப்பித்தேன் பிழைத்தேன்' என்பது போல பறந்து மறைந்தது.

கருடனல் கீழே போடப்பட்ட மஞ்சள் குஞ்சு, முள் வேலிக்குள்ளே போய் விழுந்தது. மற்ற குஞ்சு கள் அனைத்தும் கோவெனக் கதறிக் கொண்டு, சகோதரக் குஞ்சைச் சுற்றிச் சுற்றி வந்தன.

அந்நேரத்தில் சண்டை போட்டுக் கீழே குதித்த தாய்க் கோழி, பதறிக் கொண்டு ஓடி வந்தது.

முள்வேலிக்குள் நுழைந்து, மெதுவாக கோழிக் குஞ்சைத் தூக்கிக் கொண்டு வந்தது. மேனியெல் லாம் தடவிப்பார்த்தது; தழுவிக் கொண்டது. கட்டிப்பிடித்து அழுதது. எந்தக் காயமும் ஏற்பட வில்லை. நல்ல வேளை! 'உனக்கொன்றும் ஆகவில்லை.

கடவுள் தான் உன்னைக் காப்பாற்றினார், என்று கடவுளை வணங்கியது. மஞ்சள் குஞ்சு நடுங்கிக் கொண்டே தாயைப்பார்த்தவாறு பேசியது.

'இனிமேல் உங்கள் பேச்சைத் தட்டமாட்டேன் அம்மா' என்று மஞ்சள் குஞ்சு நிமிர்ந்து, தாயின் முகத்தைப் பார்த்தது. அதற்குப் பகீர் என்றது.

ஐயோ! உங்கள் வலது கண்ணிலே இரத்தம் வருகிறதே! கண் குருடாகி விட்டதாம்மா? என்று மஞ்சள் குஞ்சு, இரத்தத்தைத் துடைக்கப்போனது.

எனக்கு இரண்டு கண்களும் போனாலும் பரவாயில்லை. என் உயிரைக் கொடுத்தாவது உன்னைக் காப்பாற்றியிருப்பேன். அதைப் பற்றிக் கவலைப் படாதே! பிழைத்துக் கொண்டாய். அதுவே போதும் என்று தாய்க் கோழி ஆறுதல் கூறியது.

தாய்க் கோழி கருடன் கால்களை கொத்திய போது அது கோழிக் குஞ்சை விட்டு விட்ட நேரத்தில், அதன் கூரிய நகமானது, இதன் கண்ணைக் கிழித்துக் காயப்படுத்தி விட்டது. என்றாலும், தாய்க்கோழி தன் கண் போனது பற்றிக் கவலைப்படவே இல்லை.

'தாய் தான் நமக்கு தெய்வம். நம்மை நன்கு வாழவைக்கத் தானே கட்டளை இடுகிறாள். கட்டுப் பாடு விதிக்கிறாள், அதட்டுகிறாள். அதிகாரம்

செய்கிறாள். அதை நான் மோசம் என்று நம்பி, தாயின் பாசத்தை இழந்து போனேனே' என்று மஞ்சள் குஞ்சு அழுதது.

'நீ திமிராகப் பேசியது பற்றி நான் வருந்தவே இல்லை அது உன் அறியாமையாகும். இப்பொழுது நீ திருந்தி வந்தாயே! அதுவே எனக்கு பேரின்பம். நீயும் மற்றவர்களோடு கூடிக் குலவி சந்தோஷமாக இரு' என்று தாய்க் கோழி கூறியதும் 'ஆமாம் ஆமாம், என்று எல்லா குஞ்சுகளும் தலையை ஆட்டி வரவேற்றன. ஓடி விளையாடி மகிழ்ந்தன.

# 10. எருமையும் பெருமையும்!

லாரி ஒன்று வேகமாக வந்து கொண்டிருந்தது. அந்த சாலையில் வேறு எந்த வாகனமும் வரவில்லை என்ற தைரியத்தில் அந்த டிரைவர் லாரியை வேகமாக ஓட்டிக் கொண்டிருந்தான்.

என்ன ஆச்சரியம்! ஒரு எருமை மாடு திடீரென்று குறுக்கே நடந்து வந்தது. அது அந்த சாலையைக் கடக்கும் என்று நினைத்தான் டிரைவர். ஆனால், அது நடு ரோட்டில் படுத்துக் கொண்டது.

மிகவும் சிரமப்பட்டு, லாரியை நிறுத்திவிட்டான் டிரைவர். கீழே இறங்கி வந்தான். 'அறிவு கெட்ட எருமை மாடு' என்று ஆத்திரத்தோடு கத்தினான். 'சூ' என்று விரட்ட கை ஓங்கினான்'

எதையும் காதில் போட்டுக் கொள்ளாமல் எருமை மாடு அவனை ஏற இறங்கப் பார்த்தது. ஏதோ அவனை ஒரு அற்பப்பிராணியைப் பார்ப்பது போல ஏளனமாக எருமை மாடு பார்த்தது.

கையால் விரட்டிக் கொண்டிருந்த அவன் கீழே கிடந்த ஒரு சிறு கல்லை எடுத்து அடிக்கக் கையை ஓங்கினான். அதற்குள் அந்த எருமைமாடு தன் நீண்ட வாலை சுழற்றி சுழற்றி வீசியது.

அவ்வளவுதான்! டிரைவர் சட்டை வேட்டியெல் லாம் சேருகி விட்டது. முகத்தில் படப்போகிறது என்று முகத்தை மூடுவதற்குள் ஒரு கண்ணிலும் சேறு பட்டுவிட்டது. பயந்து கொண்டு லாரிக்குள் போய் ஏறிக் கொண்டான். வேகமாக வண்டியை வேறுபுற மாக ஓட்டிக் கொண்டு போய்விட்டான்.

'சனியன்' என்று அவன் கத்தியது அந்த எருமை மாட்டுக்கும் கேட்டது. உடனே சத்தம் போட்டு கனைக்க ஆரம்பித்தது எருமைமாடு. உடனே தன் கன்றுக் குட்டியை சத்தம் போட்டுக் கூப்பிட்டது. ஒரு மரத்தடியில் பயந்துபோய் நின்ற அதன் கன்றுக் குட்டி, மெதுவாக நடந்துவந்து தன் தாயின் அருகில் நின்றது.

சேற்றில் புரளும்போது ஏன் ஏன் என்றாயே? இப்பொழுது பார்த்தாயா! அந்த டிரைவர் எப்படி ஓடினான்? இதுதான் என் வெற்றி என்றது எருமை மாடு.

மற்றவர்களை வேதனைப் படுத்தி மகிழ்வது ஒரு மகிழ்ச்சியா? கன்றுக்குட்டிக்கு ஒன்றும் புரியவில்லை.

தாயின் கர்வம் நிறைந்த முகத்தைப் பார்த்து திரும்பி வேறுபுறம் பார்த்துக் கொண்டு நின்றது.

என்னை உனக்குப் பிடிக்கவில்லையா? இல்லை புரியவில்லையா? என் ஆசை மகனே! நான் சொல்வதைக் கேள்! அப்பொழுதுதான் என் மனம் உனக்குப்புரியும்! என்று தன் கன்றுக்குட்டியைக் கூப்பிட்டுப் பேசியது.

என்னதான் தன் தாய் பேசப்போகிருள் என்று வேண்டா வெறுப்பாக திரும்பிப் பார்த்தது கன்றுக் குட்டி.

நம்மை ஏன் எருமை மாடு என்று இந்த மனிதர்கள் கூப்பிடுகின்ருர்கள். அதனுல்தான் அவர்கள் மேல் எனக்குக் கோபம்.

பிறகு நம்மை எப்படிக் கூப்பிட வேண்டும் என்கிருய்? என்றது கன்றுக்குட்டி.

சின்ன யானை என்று கூப்பிட வேண்டும். நமக்கும் யானைக்கும் என்ன வித்தியாசம் இருக்கிறது? யானை எவ்வளவு கறுப்போ, அவ்வளவு கறுப்பாக நாம் இருக்கிருேம். அதுவும் அசைகிறது. நாமும் அசைந்துதான் நடக்கிருேம். அதற்கும் இரண்டு கொம்பு. நமக்கும் இரண்டு கொம்பு. இப்படி எல்லாவற்றிலும் நிறைய ஒற்றுமை இருக்கிறதே! ஏன் கூப்பிடக் கூடாது? கோபமாகப் பேசியது தாய் எருமை.

யானை இருந்தாலும் ஆயிரம் பொன். இறந்தாலும் ஆயிரம் பொன் என்கிறார்களே! அது ஏன்?

உபயோகமில்லாத பிராணி அது. உதிய மரம் பெருத்தால் உத்திரத்திற்கு கூட ஆகாது என்பார்கள். யானையால் யாருக்கு என்ன லாபம்! அது தடிமிருகம், அவ்வளவுதான். வேறு என்ன அதனால் பயன் உண்டு என்றது எருமை மாடு.

வழியில் படுத்துக் கொண்டு வம்பு செய்கிறீர்களே! இதுதான் நீங்கள் செய்யும் உபகாரமோ!'' என்று எதிர்க்கேள்வி கேட்டது இளங்கன்று.

நீ ஒரு மடசாம்பிராணி. இன்று பல கூட்டங்களுக்கு தாய் போல உதவுவது நமது கூட்டம்தான். 'எருமைப்பால் எவ்வளவு நன்றாக இருக்கிறது. காபியும் போடலாம். தயிரும் கட்டியாகக் கிடைக்கும். நிறைய வெண்ணெய், நெய்வரும் என்று தேடித்தேடி நம்மிடம் மக்கள் வருகிறார்களே!

சந்தோஷமாக பாலை சாப்பிட்டு, உடம்பைத் தேற்றிக் கொண்டு நம்மையே 'எருமை' என்று ஏளனமாகப் பேசி மகிழ்கிறார்கள், நன்றி கொன்றவர்கள் அவர்கள்! என்று மிகவும் ஆத்திரமாகப் பேசியது.

நம்மைக் கஷ்டப்பட்டு, பணம் செலவழித்து வளர்க்கிறார்கள், பாலைக் கறந்து பயன்பெறுகிறார்கள். இதில் உனக்கு என்ன வருத்தம் என்றது கன்றுக் குட்டி.

பால்கொடுக்கிறது பசு. அதைமட்டும் 'கோமாதா எங்கள் குலமாதா' என்று கும்பிடுகின்றார்களே! இது தவறில்லையா? பசுவின் பாலைவிட எருமைப் பாலுக்கு விலை அதிகம். நம் பாலுக்குத்தான் வரவேற்பு அதிகம் இப்படி இருக்கும்போது, நம்மை மதிக்காத மனிதர்களை நாம் மட்டும் ஏன் மதிக்க வேண்டும்?

அதனால்தான் அவர்களை விரட்டி விரட்டி அடிக்கிறேன், அவர்கள் முகத்தில் சேற்றைப் பூசுகிறேன். வருகின்றவர்களை வம்புக்கு இழுக்கிறேன், நீயும் என்னைப் போலவே செய்தால் தான் எனக்கு சந்தோஷமாக இருக்கும்.

தாயின் பேச்சைக் கேட்கத் தயாராக இல்லை. கன்றுக்குட்டி வேண்டாவெறுப்பாக 'தான் போகிறேன், என்று சொல்லி விட்டு. தாயைப் பார்க்காமலே போகத் தொடங்கியது.

'சொல் பேச்சுக் கேட்காத பிள்ளை குலத்துக்கு ஈனம் என்று கோப மழை பெய்தது எருமை. இன்னும் பலபேர்களை பாழடித்தால் தான் என் மனம் சாந்தியடையும் என்று எருமை சேற்றைப் பூசிக் கொள்ளப் புறப்பட்டது.

ஊருக்கு மேற்குப்புறம் ஒரு தாமரை குளம் உண்டு. அதில் தண்ணீர் வற்றிக் குட்டையாகக் கிடந்தது. அதன் சுற்றுச் சுவர்கள் இடிந்து போய் கிடந்தால், சேறு கலக்கிக் கொள்ள, இறங்கிப் போய் வர, எருமைக்கு சாதகமாக இருந்தது.

நன்றாக சேற்றில் புரண்டு விட்டது. எருமை, இப்பொழுது அதற்கு கர்வம் வந்து விட்டது. பட்டத்து யானை ராஜ வீதியில் வருவது போல தன்னை நினைத்துக் கொண்டது. எருமையைப் பார்த்து மற்றவர்கள் பயந்து ஒதுங்கிப் கொண்டதை பார்த்துத் தான் அதற்கு அந்த நினைப்பு வந்தது.

எதிரிலே ஒரு டீக்கடை. அங்கிருந்து ஒரு சினிமா பாட்டு காற்றிலே மிதந்து வந்தது. அதைக் கேட்டபடி, தலையை ஆட்டிக் கொண்டே, எருமை மாடு டீக்கடையை நோக்கி வந்தது.

என்ன ஆச்சரியம்! புல் கட்டு ஒன்று ரோடு ஓரத்திலே இருந்தது. அதைப் பார்த்ததும் அதைத் தின்று தீர்த்து விட வேண்டும் என்ற வேகம் வந்து விட்டது.

முதலில் நின்று கொண்டு தின்ன ஆரம்பித்த எருமை மாடு, பிறகு படுத்துக் கொண்டு தின்றது. அப்பொழுது ஒரு லாரி வந்து நின்றது. அதன் பின் சக்கரத்தில் கல் ஒன்றை வைத்து விட்டு டீ குடிக்கச் சென்றார்கள் லாரியில் உள்ளவர்கள்.

அவர்களை ஒரு விரட்டு விரட்ட வேண்டும் என்று எருமை நினைத்துக் கொண்டே, புல்லினை வேகமாகத் தின்று கொண்டிருந்தது.

ஐயையோ! பாழாய் போன எருமைமாடு என் புல் கட்டைத் தின்று விட்டதே! இனிமேல் எப்படி

புல்லை விற்பேன்! என் குடும்பம் இன்றைக்கும் பட்டினி தான்' என்று ஒரு பெண் ஓடி வந்தாள். அதை விரட்ட கையை ஓங்கினாள்.

எருமை மாடு படுத்துக் கொண்டே தன் வாலை சுழற்றி அடித்தது. ஒரு துளி சேறு அவள் கண்ணில் பட்டுவிடவே, அவளுக்குக் கோபம். அதை அடிக்க வேண்டும் என்ற வெறி. பக்கத்தில் கல் எதுவும் கிடைக்கவில்லை.

லாரியின் சக்கரத்திற்குத் தடையாக வைத்திருந்த அந்த கல்லை எடுத்து ஓங்கி அடித்தாள்! 'உன் அடி என்ன செய்யும்' என்பது போல, கொம்பை ஆட்டிவிட்டு எருமை, மீண்டும் புல்லை ருசித்துத் தின்றுகொண்டிருந்தது.

நிம்மதியாக படுத்துக் கொண்டு, காலை நீட்டி விட்டவாறு தின்றுகொண்டிருந்த எருமை மாட்டுக்குப் பகீர் என்றது. ஆமாம்! லாரியானது பின்புறமாக வந்துகொண்டிருந்தது. எழுந்து ஓடி விடலாம் என்றால், எருமையால் எழுந்திருக்க முடியவில்லை.

தரையெல்லாம் சேறாக இருந்ததால், வழுக்கல் வேறு. அம்மா என்று ஒரு கத்தல். எருமைக்கு அந்த சத்தம் மட்டுமே காதில் கேட்டது. கன்றுக் குட்டி போட்ட சத்தம்தான் அது.

பின்னங்கால்கள் இரண்டின் மேலே லாரியின் பின் சக்கரங்கள் ஏறி அரைத்து அப்படியே நின்று

விட்டன. ஓடி வந்த லாரி டிரைவர் சாமர்த்தியமாக உள்ளே ஏறி வண்டிக்குப் 'பிரேக்' போட்டு நிறுத்தினர்.

எருமைக்கு இப்பொழுது வீசுவதற்கு வாலும் இல்லை. எழுந்து சேற்றைப் பூசிக் கொண்டு வர, கால்களும் வலுவுள்ளதாக இல்லை.

'பார்த்தாயா அம்மா! உனக்கு அடிபட்டதைப் பற்றி ஒருவர் கூட வருத்தப்படவில்லை. திமிர் கொண்ட மாட்டுக்கு இதுவும் வேண்டும். இன்னமும் வேண்டும் என்று எல்லோரும் பேசிக் கொள்கின்றனர் கள். எனக்கு அதிக வேதனையாக இருக்கிறது' என்றது. கன்றுக்குட்டி.

எந்த சேற்றை இறைத்து எல்லோரையும் துன்பப்படுத்தினேனே, அதே சேறு தான் என்னையும் துன்பத்துக்கு ஆளாக்கி விட்டது வழுக்கலாகி என்னை எழுந்திருக்க விடாமல் பண்ணிவிட்டதே! என் விதி தான் என்றது எருமைமாடு.

'கத்தியை எடுப்பவன் கத்தியாலே சாவான்' என்பார்களே, அப்படித் தான் என் கதியும் ஆயிற்று. என் மகனே! நீயாவது நல்ல கன்றாக இரு. எல்லோரிடமும் நல்ல பெயர் எடு.

பிறரை சந்தோஷப்படுத்தி சந்தோஷப்படு. உதவி செய்து உதவி பெறு. அது தான் கடைசி

வரையிலும் கைகொடுக்கும். காத்து நிற்கும்' என்றது தாய்.

மருத்துவ மனையில் படுத்திருந்த எருமை மாடு தான், இப்படி தன் கன்றுக் குட்டிக்குப் புத்திமதி கூறியது.

'அப்படியே செய்கிறேன் அம்மா' என்று அம்மா வுக்குப் புல் கொண்டு வர ஓடியது கன்றுக்குட்டி. நடக்க முடியாதத் தன் கால்களைப் பார்த்து எருமை மாடு கண்ணீர் விட்டது.

'கடவுளே! பெற்றோர் செய்த தவறு, பிள்ளைக்குத் தண்டனையாக வரும் என்கிறார்கள். என் தவறுக்கு நான் தண்டனை அனுபவித்துவிட்டேன். என் மகனை நீ தான் காப்பாற்ற வேண்டும்' என்று வேண்டிக் கொண்டது.

தவறை உணர்ந்த எருமை மாடு கண்ணீர் விட்டது. அது நன்றாகக் குணமாக நாமும் கடவுளை வேண்டிக் கொள்வோம். நல்லவர்கள் ஜெயம் நிச்சயம் பலிக்கும், அதுதானே உண்மை!

# ஆசிரியரின் பிற நூல்கள்

| | | |
|---|---|---|
| ஒலிம்பிக் பந்தயத்தின் கதை (மத்திய அரசு பெற்ற நூல்) | 3 | 00 |
| விளையாட்டுக்களின் வழி முறைகளும் வரலாறும் | 11 | 00 |
| விளையாட்டுக்களின் கதைகள் (மத்திய அரசு பரிசு பெற்ற நூல்) | 15 | 00 |
| கிரிக்கெட் ஆட்டத்தின் கதை | 4 | 50 |
| விளையாட்டுகளுக்குப் பெயர் வந்தது எப்படி? | 3 | 25 |
| விளையாட்டு உலகில் வீரக்கதைகள் | 3 | 50 |
| வழிகாட்டும் விளையாட்டு வீரர்கள் | 3 | 25 |
| விளையாட்டுக்களின் விதிகள் | 14 | 00 |
| கால் பந்தாட்டம் | 4 | 00 |
| கைப் பந்தாட்டம் | 4 | 00 |
| கூடைப் பந்தாட்டம் | 4 | 00 |
| வளைகோல் பந்தாட்டம் | 4 | 00 |
| கிரிக்கெட் ஆட்டத்தில் கேள்வி பதில் | 4 | 00 |
| பூப்பந்தாட்டம் | 5 | 00 |
| மென் பந்தாட்டம் | 6 | 00 |
| வளையப் பந்தாட்டம் | 2 | 00 |
| கோகோ ஆட்டம் | 4 | 00 |
| சடுகுடு ஆட்டம் | 7 | 00 |
| கேரம் விளையாடுவது எப்படி? | 4 | 00 |
| சதுரங்கம் விளையாடுவது எப்படி | 4 | 00 |
| நீங்களும் ஒலிம்பிக் வீரராகலாம் | 6 | 00 |
| ஒரு நூறு சிறு விளையாட்டுகள் | 5 | 50 |
| கூடி விளையாடும் குழு விளையாட்டுகள் | 4 | 00 |
| விளையாட்டு விருந்து | 5 | 00 |
| விளையாட்டு விழா நடத்துவது எப்படி? | 5 | 00 |
| விளையாட்டுக்களில் விநோதங்கள் | 4 | 50 |
| விளையாட்டு அமுதம் | 4 | 50 |
| விளையாட்டு உலகம் | 3 | 50 |
| விளையாட்டுச் சிந்தனைகள் | 3 | 00 |
| விளையாட்டுக்களில் விறுவிறு வினா விடை | 3 | 50 |
| விளையாட்டுத்துறையில் சொல்லும் பொருளும் | 4 | 50 |
| விளையாட்டு உலகில் சுவையான சம்பவங்கள் | 5 | 00 |
| வாழ்க்கைப் பந்தயம் | 6 | 00 |
| பாதுகாப்புக் கல்வி | 2 | 50 |
| Quotaions on Sports and Games | 7 | 00 |
| General Knowledge in Sports and Games | 1 | 25 |

# எஸ். நவராஜ் செல்லையா. M A;M P Ed.

எழுதிய நூல்கள்

| | | |
|---|---|---|
| ஒலிம்பிக் பந்தயத்தின் கதை | 3 | 00 |
| (மத்திய அரசு பரிசு பெற்ற நூல்) | | |
| விளையாட்டுக்களின் கதைகள் | 15 | 00 |
| (மத்திய அரசு பரிசு பெற்ற நூல்) | | |
| விளையாட்டுக்களின் வழி முறைகளும் வரலாறும் | 11 | 00 |
| கிரிக்கெட் ஆட்டத்தின் கதை | 4 | 50 |
| விளையாட்டுகளுக்குப் பெயர் வந்தது எப்படி? | 3 | 25 |
| விளையாட்டு உலகில் வீரக்கதைகள் | 3 | 25 |
| வழிகாட்டும் விளையாட்டு வீரர்கள் | 3 | 00 |
| விளையாட்டுக்களின் விதிகள் | 14 | 00 |
| கால் பந்தாட்டம் | 4 | 00 |
| கைப் பந்தாட்டம் | 4 | 00 |
| கூடைப் பந்தாட்டம் | 4 | 00 |
| வளைகோல் பந்தாட்டம் | 4 | 00 |
| கிரிக்கெட் ஆட்டத்தில் கேள்வி பதில் | 4 | 00 |
| பூப்பந்தாட்டம் | 5 | 00 |
| மென் பந்தாட்டம் | 6 | 00 |
| வளையப்பந்தாட்டம் | 2 | 50 |
| கோகோ ஆட்டம் | 4 | 50 |
| சடுகுடு ஆட்டம் | 7 | 00 |
| கேரம் விளையாடுவது எப்படி? | 4 | 00 |
| சதுரங்கம் விளையாடுவது எப்படி? | 4 | 00 |
| நீங்களும் ஒலிம்பிக் வீரராகலாம்? | 6 | 00 |
| ஒரு நூறு சிறு விளையாட்டுக்கள் | 5 | 50 |
| கூடி விளையாடும் குழு விளையாட்டுக்கள் | 4 | 00 |
| விளையாட்டு விருந்து | 5 | 00 |
| விளையாட்டு விழா நடத்துவது எப்படி? | 5 | 00 |
| விளையாட்டுக்களில் விநோதங்கள் | 4 | 50 |

Wrapper Printed by : Grace Printers, Madras-33